## கொலம்பியா புதிய வெளியீடு



கான ஸரஸ்வதி

# D.K.பட்டம்மாள்

GE.6297

**எப்படி பாடினரோ**

2 பாகங்கள்

(கர்னாடக தேவகாந்தாரி)



ஸங்கீத வித்வான்

# சித்தூர் சுப்ரமணிய பிள்ளை

GE.6289

**ஏராமுனி**

2 பாகங்கள் (வகுளாபரணம்)

ஸ்ரீமதி

# லக்ஷ்மிலோக சுப்ரமணியம்

வீணையும் வாய்ப்பாட்டும்

GE.6275

**எந்தனுசு மனசுலோனி**






## ஸரஸ்வதி ஸ்டோர்ஸ்.....மவுண்ட் ரோட்.....மதராஸ்.

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடமும் கிடைக்கும்:

மெஸர்ஸ். என். ராஜன் & கோ., 48-D, காவேரி ரோடு, பெங்களூர் கன்டோன்மென்ட். மெஸர்ஸ். குப்தா கார்ப்பொரேஷன், தபால் பெட்டி நெ. 35, 17A/428 அருணாசல ஆச்சாரி தெரு, சேலம்.

# விரும்பி வாங்குவது



# ப்ளாண்டர்ஸ் டீ

கடையில் சாமான் வாங்குவதில் சரஸ்வதியை ஏமாத்தடிப்பது கஷ்டம். கேட்கும் சரக்கைத் தவிர வேறு எதையும், கடைக்காரர்கள் எவ்வளவு நன்ருய் இருக்கும் என்று புகழ்ந்த போதிலும், ஒப்புக்கொள்ளமாட்டாள்.

அவள் ப்ளாண்டர்ஸ் ஸ்பிரிங்டேல் பச்சை லேபில் டீயை உபயோகித்துப் பார்த்திருக்கிருள். இன்று அதுவே அவள் ஆராய்ந்து கண்டுகொண்ட டீ.

ப்ளாண்டர்ஸ் பச்சை லேபில் டீ அளியுங்கள்.

அது உயரத்தில் வளர்க்கப்பட்டது




**ஸ்ரீ ப்ளாண்டர்ஸ் கம்பெனி லிட்.,**

கூடலூர், நீலகிரி, தென் இந்தியா..

PK4 TH




மலர் 5 | 1946 மே 12 | வியய
இதழ் 40 | | சித்திரை 30



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.



# இப்பொழுது பூராவும் வெண்மையானது —ஜாஸ்தி அழுக்குப்படியும் இடங்கள் உள்பட

ஒவ்வொரு உடையிலும் சீக்கிரம் மலினமாகும் பாகங்கள் உண்டு— அந்த பாகங்களை சொற்பமாக சோப்பைத் தேய்த்து, தண்ணீரில் நனைத்து அடித்துத் துவைப்பதால் அதிகமாகக் கெட்டுப்போகக் கூடினவை.

**உங்கள் துணிகளை ஸன்லைட் முறைப்படி சுத்தம்செய்து அடித்துத் துவைப்பதனுலேற்படும் நாசத்தை விலக்குங்கள்.**

ஸன்லைட் சோப்பின் ஏராளமான சுலபமாக இயங்கிற நுரையை நனைந்த துணியிடையே புகுத்திக் காக்கி, பிறகு அலசி சுத்தம் செய்தால், துணி மிக தூய்மையாகவும், வெண்மையாகவு மாகிறது . . . அத்துடன் உங்கள் ஆடைகளுக்கு, இச் சுத்தமான சோப்பைப் பயன்படுத்துவோருடைய இஷ்டபோகமான தேவைகளையொத்த மிருது தன்மையும் ஏற்படுகிறது. ஸன்லைட் உங்கள் துணிகளுக்கும், அவையின் சாயங்களுக்கும் குணமளிப்பதோடு, உங்கள் கைகளை மிருதுவாகவும், மழமழப்பாகவும் வைத்துக் கொள்ளுகிறது.

இது ஸன்லைட் முறைப்படி சுத்தம் செய்தது!






# ஸன்லைட் சோப்

S. 79-23 TM

LEVER BROTHERS (INDIA) LIMITED




மலர் 5 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 40

# என்ன சேதி?

## இன்னொருவர் சென்றார்

மகத்தான தேச பக்தரும் திறமைசாலரும் தியாகியுமான இன்னொரு பாரதத் தாயின் புதல்வர் பாரத நாடு சுதந்திரம் பெறுவதைக் கண்ணால் பாராமலே காலஞ் சென்றார். கல்கத்தாவில் தேச பந்து சித்தரஞ்சன தாஸ் எப்படியோ, அப்படி பம்பாயில் ஸ்ரீ புலாபாய் தேசாய் வக்கீல்களுக்குள் அரசராய் விளங்கினார். பதினாயிரக்கணக்கில் பணம் சம்பாதித்தார். பம்பாய் சர்க்காரின் அட்வகேட் ஜெனரலாக விளங்கினார். அதிலெல்லாம் மன அமைதி கிட்டாமல் 1930-ம் ஆண்டில் உப்பு சத்தியாக்கிரஹ இயக்கத்தின்போது தேசத் தொண்டில் இறங்கித் தியாக நெருப்பில் குதித்தார். பிற்பாடு, இந்திய சட்டசபையில் பண்டித மோதிலால் நேரு வகித்து வந்த காங்கிரஸ் கட்சித் தலைமைப் பதவிக்கு வந்தார். அந்தப் பதவிக்கே அவரால் கௌரவம் ஏற்பட்டது என்று கூறுவது மிகையாகாது. 1942 ஆகஸ்டு எழுச்சிக்குப் பிறகு காங்கிரஸ் மாபெருந் தலைவர்கள் சிறைச்சாலையிலிருந்தபோது, அவர்களை விடுதலை செய்வதற்காக அவர் ராஜாஜியுடன் ஒத்துழைத்துச் செய்த பெரு முயற்சிகள் யாவரும் அறிந்ததே. கடைசியாக, ஐ. என். ஏ. விசாரணையில் அவர் மது வக்கீல் தொழிலின் சாமர்த்தியத்தை யெல்லாம் காட்டி ஒப்பற்ற சேவை புரிந்தது சமீப சம்பவமாகும்.



## வாழ்க அஸ்ஸாம்!

முன் தடவை மாகாணங்களில் காங்கிரஸ் ஆட்சி நடந்தபோது மற்ற மாகாணங்களுக்கு வழி காட்டும் பெருமை எப்போதும் சென்னை மாகாணத்துக்குக் கிடைத்துக் கொண்டு வந்தது. இந்தத் தடவை அந்தப் பெருமை அஸ்ஸாம் மாகாணத்துக்குப் போகும் என்று தோன்றுகிறது. மதுவிலக்கு முதலிய காரியங்களுக்கு, "பணத்துக்குப் போவதெங்கே?" என்ற கேள்வியை நாம் குறிப்பிட்டு, மார்ச் 31உ இதழில் நூல் நூவுளி ஆலைத் தொழிலை சர்க்காரே எடுத்து நடத்த வேண்டும் என்று சொல்லியிருந்தோம். அஸ்ஸாம் மாகாண காங்கிரஸ் சர்க்கார் மேமீ 4உ வெளியிட்டிருக்கும் அறிக்கையில் பதினொரு முக்கிய தொழில்களை அரசாங்கம் எடுத்து நடத்தப் போவதாக அறிவித்திருக்கிறார்கள். அந்தப் பதினொரு தொழில்களில் பருத்தி ஆலைத் தொழில் முதல் ஸ்தானம் வகிப்பதைப் பார்த்து மகிழ்கிறோம். அத்துடன் வேறு பல தொழில்களையும் சர்க்கார் எடுத்து நடத்துவது பற்றி யோசிக்கப்பட்டு வருகிறதென்றும், பத்து லட்சம் ரூபாய்க்கு மேல் மூலதனம் தேவையாயுள்ள தொழில்களை யெல்லாம் இனி அரசாங்கமே நடத்தும் என்றும் தெரிவித்திருக்கிறார்கள். இவ்விதம் பிற மாகாணங்களுக்கு வழி காட்டும் அஸ்ஸாமை வாழ்த்துகிறோம்.

ஸிம்லாவில் நடக்கும் மூன்று கட்சி மகாநாட்டைப் பற்றி வரும் செய்திகள் நம்பிக்கையையும் நிராசையையும் மாற்றி மாற்றி ஊட்டி வருகின்றன.

இந்தியா

நிராசை

நம்பிக்கை

ஸிம்லா

எகிப்து நாட்டைப் பிரிட்டிஷ் துருப்புகள் காலி செய்து விட்டுப் புறப்படுகின்றன. தொழிற்கட்சி சர்க்காரின் மேற்படி தீர்மானம் சர்ச்சிலுக்குப் பிடிக்கவில்லை.



# அநியாயக்காரர்கள்!

மிக்க அநியாயக்காரர்கள்!

இருந்தாலும், ரொம்ப ரொம்ப அநியாயம் செய்கிறார்கள்!

ஏதோ இந்தப் பஞ்ச காலத்தில் 13½ ரூபாய் 18¾ ரூபாய் 27¼ ரூபாய் என்று சம்பளம் கிடைத்தால் சிவனே என்று வாங்கிக்கொண்டு வயிற்றை இறுக்கிக் கட்டிக் கொண்டு வேலையை ஒழுங்காகச் செய்துகொண்டு சும்மா விழுந்து கிடக்கக் கூடாதோ?

அப்படி இருக்க மாட்டார்களாம்!

சம்பளம் போதாதாம்! அதிகம் வேண்டுமாம்! கொடுக்கா விட்டால் வேலை செய்ய மாட்டார்களாம்! வேலை செய்யாமல் பட்டினி கிடந்து செத்துப் போவார்களாம்!

என்ன அநியாயம் பார்த்தீர்களா? பஞ்சம் பயமுறுத்திக் கொண்டிருக்கும் இந்த நாளில் சம்பளம் அதிகம் கேட்கலாமா? வேலை நிறுத்தம் என்ற பேச்சை வாயினாலே சொல்லலாமா?

பாலட் எடுப்பதாம் பாலட்டு! வோட்டுப் போடுவதாம் வோட்டு! அப்புறம் வேலை நிறுத்த நோட்டீசு கொடுப்பதாம்!

அநியாயக்காரர்கள், ஐயா! அநியாயக்காரர்கள்!

ரயில்வேத் தொழிலாளிகள் வெகு வெகு வெகு அநியாயக்காரர்கள்!

இந்த அநியாயமான காரியத்தில் அந்த ரயில்வேத் தொழிலாளிகளுக்குள்ளே இருக்கும் ஒற்றுமையைப் பார்த்தால், எல்லாம் கலியுகத்தின் மகிமை என்றே தோன்றுகிறது!

கேளுங்கள் கதையை! தென்னிந்திய ரயில்வேத் தொழிலாளிகளுக்குள்ளே சம்பளம் அதிகம் கோரி வேலை நிறுத்தம் செய்யலாமா கூடாதா என்று இரகசிய பாலட் எடுத்தார்கள். அதன் முடிவு என்ன தெரியுமா? பின்வரும் புள்ளி விவரங்களைப் பாருங்கள்:—

| | |
|---|---|
| 1. மொத்தம் எஸ். ஐ. ஆர். தொழிலாளிகள் | 26,250 |
| 2. இப் பாலட்டில் கலந்து கொண்டவர்கள் | 23,536 |
| 3. வேலை நிறுத்தம் செய்ய வேண்டும் என்றவர்கள் | 23,475 |
| 4. வேண்டாம் என்றவர்கள் | 61 |

பார்த்தீர்களா, அநியாயமான காரியத்தில் எப்படி ஒற்றுமை ஏற்படுகிறதென்று! இந்தியர்கள் ஒற்றுமையென்பதே இல்லாத நெல்லிக்காய் மூட்டைகள் என்று பெயர் வாங்கியவர்கள் ஆயிற்றே! அப்படியிருக்க, இப்போது தென்னிந்திய ரயில்வேத் தொழிலாளிகள் வேலை நிறுத்த விஷயத்தில் காட்டும் ஒற்றுமையை என்னவென்று சொல்வது?

தொழிலாளிகள்தான் ஏதோ எழுதப் படிக்க அதிகம் தெரியாதவர்கள்; ஒரு வேளை கிளர்ச்சிக்காரர்களுடைய துர்ப் போதனையைக் கேட்டு இந்த அநியாய முடிவுக்கு வந்திருக்கலாம்.

ஆனால் வெள்ளைச் சட்டை தரிக்கும் கல்வியறிவு படைத்த ஸ்டேஷன் மாஸ்டர்களின் சங்கதி என்ன?

தென்னிந்திய ரயில்வேயில் ஸ்டேஷன் மாஸ்டர் சங்கம் என்பதாக ஒன்று இருக்கிறதாம். அவர்கள் செய்த முடிவைக் கேளுங்கள்:

| | |
|---|---|
| 1. மொத்தம் ஸ்டேஷன் மாஸ்டர்கள் | 1201 |
| 2. வோட்டுப் போட்டவர்கள் | 1075 |
| 3. வேலை நிறுத்தம் செய்யச் சாதகமானவர்கள் | 1061 |
| 4. பாதகமானவர்கள் | 13 |

ஆகவே, படித்தவர்களின் லட்சணமும் மேற்படி மேற்படியாகத்தான் இருக்கிறது. ரயில்வே காங்கிக் கூலிகள் முதல் ஸ்டேஷன் மாஸ்டர்கள் வரையில் எல்லாரும் ஒரே மூர்த்தண்யமாய் அல்லவா இருக்கிறார்கள்? 100-க்கு 99¾ பேருக்கு மேல் வேலை நிறுத்தத்தை ஆதரித்தல்லவா வோட்டுப் போட்டிருக்கிறார்கள்?

எஸ். ஐ. ஆர். என்று வழங்கும் நமது தென்னிந்திய ரயில்வேயில் மட்டுந்தான் இந்த லட்சணம் என்று நினைக்க வேண்டாம்.

எம். எஸ். எம்., ஜி. ஐ. பி., பி. என். ஆர்., பி. பி. ஸி. ஐ. முதலிய சகல ரயில்வேக்களிலும், அதாவது இந்தியாவில் எங்கெங்கே தண்டவாளத்தின் மேல் ரயில் ஓடுகிறதோ அந்த ரயில்வேக்கள் அத்தனையிலும் தொழிலாளிகள் மேற்கண்டபடியேதான் முடிவு சொல்லியிருக்கிறார்கள்.

எம். எஸ். எம். இரண்டு சென்டர்களில் 7530 பேர் வோட்டுக் கொடுத்

தார்கள். இவர்களில் 7521 பேர் வேலை நிறுத்தம் வேண்டும் என்றார்கள். 9 பேர் வேண்டாம் என்றார்கள்.

பி. என். ஆர். ரயில்வேயில் 7 சென்டர்களில் 18,581 பேர் வோட்டுக் கொடுத்தார்கள். இவர்களில் 18,530 பேர் வேலை நிறுத்தம் செய்வதற்குச் சாதகம். 51 பேர் பாதகம்.

இ. ஐ. ஆர். ரயில்வேயில் 10 சென்டர்களில் 11,546 பேர் வோட்டுக் கொடுத்ததில், 11,356 பேர் வேலை நிறுத்தத்துக்குச் சாதகம். 190 பேர் பாதகம்.

மொத்தத்தில் இந்திய ரயில்வேக்களில் வேலை செய்யும் பத்து லட்சம் ரயில்வே ஊழியர்களில் ஒன்பது லட்சத்துக்கு மேற்பட்டவர்கள் வேலை நிறுத்தத்தை ஆதரித்து வோட்டுக் கொடுத்திருக்கலாம் என்று தெரிகிறது.

அப்பப்பா! என்ன அநியாயம்! அந்த அநியாயத்திலேதான் எப்பேர்ப்பட்ட ஒற்றுமை!

மேற்படி ஒற்றுமை பலத்தை வைத்துக்கொண்டு பம்பாயில் கூடிய ரயில்வேத் தொழிலாளர் சங்க மத்தியக் கமிட்டியார் வேலை நிறுத்த நோட்டீஸ் கொடுத்திருக்கிறார்கள். அதாவது தங்களுடைய கோரிக்கைகள் நிறைவேறாவிட்டால் ஜூன் 27உ நள்ளிரவில் இந்தியாவின் எல்லா ரயில்வேக்களிலும் வேலை நிறுத்தம் ஆரம்பமாகும் என்று விளம்பரப்படுத்தியிருக்கிறார்கள்.

இப்பேர்ப்பட்ட அநியாயமான கோரிக்கையையும் அதைவிட அநியாயமான பயமுறுத்தலையும் பற்றி ரயில்வே கம்பெனிகளின் ஏஜெண்டுகள் தங்களுடைய பதிலைப் பத்திரிகைகளிலே விளம்பரப்படுத்தியிருக்கிறார்கள்.

''ரயில்வே ஊழியர்களுக்கு நாங்கள் அதைச் செய்திருக்கிறோம்; இதைச் செய்திருக்கிறோம். அவர்களிடம் அழுக்கான ரூபாய் நோட்டை வாங்கிக் கொண்டு அற்புதமான அரிசி கொடுக்கிறோம். காங்கிக் கூலிகள் பட்டப் பகலில் தண்டவாளத்தின்மீது படுத்துச் சுகமாகத் தூங்கும்படி அநுமதித்திருக்கிறோம். அப்படியெல்லாமிருந்தும் இவர்கள் சம்பளம் அதிகம் கேட்கிறார்கள். அதிகச் சம்பளம் கொடுக்காவிட்டால் வேலை நிறுத்தம் செய்வோம் என்கிறார்கள். இவர்கள் வேலை நிறுத்தம் செய்தால் அதனால் பஞ்ச காலத்தில் ரொம்ப ரொம்ப விபரீதமான நிலைமை ஏற்படும். தானியங்களை ஓரிடத்திலிருந்து ஓரிடத்துக்குக் கொண்டுபோக முடியாது. எத்தனையோ பேர் பட்டினி கிடந்து சாக நேரிடும்!'' என்று ரயில்வே கம்பெனி ஏஜெண்டுகள் எச்சரிக்கை செய்திருக்கிறார்கள்.

மாதம் இரண்டாயிரம் சம்பளமும் பஞ்சப்படியும் வாங்கிக்கொண்டு இந்தியாவுக்காக உயிரைக் கொடுத்து உழைக்கும் ரயில்வே ஏஜெண்டுகள் பாவம் வரப்போகும் பஞ்சத்தை உத்தேசித்து இவ்விதம் இரத்தக் கண்ணீர் வடிக்கிறார்கள்!

ஆனால் இந்தியாவிலேயே பிறந்து வளர்ந்த இந்திய ரயில்வேத் தொழிலாளிகளுக்குத் தங்களுடைய காரியத்தின் அநியாயம் புலப்படவில்லை!

* * *

தண்டவாளத்தில் ரயில் ஓடாவிட்டால் பஞ்சம் நம்மை என்ன பாடுபடுத்தும் என்பதை நினைக்கும்போது நமக்குப் பயமாகத்தானிருக்கிறது.

பஞ்சத்தைத் தடுப்பதற்கு ரயில் எவ்வளவு வசதியாயிருக்கிறது என்பதற்குச் சமீபத்தில் சென்னையிலேயே நாம் ஓர் உதாரணம் பார்த்தோம்.

நமது காங்கிரஸ் மந்திரிகளில் சிலர் பதவி ஏற்றுக் கொண்டதும் முதல் காரியமாக என்ன செய்தார்கள் தெரியுமா? அவரவர்களும் தங்கள் தங்கள் சொந்த ஜில்லாவுக்கும், சொந்த ஊருக்கும் விரைந்து சென்றார்கள். எதற்காகத் தெரியுமா? பஞ்சத்தைப் பற்றிய விவரங்களைத் திரட்டிக்கொண்டு வருவதற்காகத்தான்!

இத்தனை நாளும் அந்த மந்திரிகள் அந்த ஜில்லாவிலேயே குடியிருந்த போதிலும் அவர்களால் பஞ்ச விவரங்களைத் திரட்ட முடியவில்லை! சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் மாதக் கணக்காகத் திரட்டி ஏற்கெனவே அனுப்பியுள்ள பஞ்ச விவரங்கள் எல்லாம் சுத்த உபயோகமற்றவை என்று ஒரு நிமிஷத்தில் நமது புதிய மந்திரிகளுக்குத் தெரிந்து போயிற்று.

எனவே, மந்திரி பதவிக்கு வந்தார்களோ இல்லையோ, உடனே பஞ்ச விவரங்களைத் திரட்டுவதற்காக விழுந்தடித்து ஓடி ரயிலில் ஏறி அவரவர்கள் ஊர் போய்ச் சேர்ந்தார்கள். ரயில் ஸ்டேஷனில் அவர்கள் கழுத்தில் வந்து விழுந்த உபசார மாலைகளைச் சட்டுப் புட்டென்று கழற்றி எறிந்தார்கள். ''நாங்கள் மாலை போட்டுக்கொள்ள வரவில்லை. பஞ்ச விவரங்களைத் திரட்டிக்கொண்டு போக வந்தோம்! எங்கே பஞ்ச விவரங்கள்?'' என்று

கர்ஜித்தார்கள். அவ்வளவுதான்! அந்தந்த ஜில்லா, தாலூக்கா, கிராமங்களின் பஞ்ச விவரங்கள் உடனே திரண்டு உருண்டு புரண்டு வந்து அந்தந்த மந்திரிகளின் முன்னால், "இதோ இருக்கிறோம்! இதோ இருக்கிறோம்!" என்று கதறிக்கொண்டு நின்றன.

உடனே நமது மந்திரிகள் அவ்வளவு பஞ்ச விவரங்களையும் திரட்டிச் சேர்த்து மடியில் கட்டிக் கொண்டு அடுத்த ரயிலில் ஏறிச் சென்னைக்கு வந்து சேர்ந்தார்கள். நேரே பிரதம மந்திரி பிரகாசம் அவர்களிடம் சென்று தாங்கள் திரட்டிக்கொண்டு வந்த பஞ்ச விவரங்களை யெல்லாம் பொல பொல வென்று கீழே கொட்டினார்கள்!

உடனே உணவு மந்திரியான பிரதம மந்திரியின் பஞ்சக் கவலையில் பாதி தீர்ந்து போய்விட்டது!

நேயர்களே! யோசியுங்கள்! தண்டவாளத்தில் ரயில் ஓடாவிட்டால் நமது புதிய காங்கிரஸ் மந்திரிகள் இவ்வளவு சுறுசுறுப்பாகக் காரியம் செய்திருக்க முடியுமா? அவரவர்களுடைய ஊருக்குப் போய் இருபத்துநாலு மணி நேரத்துக்குள் பஞ்ச விவரங்களைத் திரட்டிக் கொண்டு திரும்பி வந்திருக்க முடியுமா?

இதிலிருந்து, பஞ்ச நிவாரண வேலைக்கு ரயில் ஒழுங்காக ஓடுவது அத்தியாவசியம் என்று ஏற்படுகிறதல்லவா? அவ்வாறு ரயில் ஓடுவதற்குப் பாதகமாக ரயில்வே ஊழியர்கள் வேலை நிறுத்தம் செய்வோம் என்கிறார்களே? என்ன அநியாயக்காரர்கள் அவர்கள்!

*  *  *

இருக்கட்டும்; இவ்வளவு தூரம் ரயில்வேத் தொழிலாளிகளின் அநியாயத்தைப் பற்றிக் கண்டனம் செய்த பிறகு, அவர்களுடைய கட்சியில் ஒரு வேளை ஏதாவது நியாயம் இருக்கிறதா, கொஞ்சமாவது ஒட்டிக் கொண்டிருக்கிறதா என்று பார்ப்போம்.

அப்படிப் பார்க்கும்போது,—அடாடா!—அவர்களுடைய கோரிக்கைகளில் அப்படி ஒன்றும் அநியாயமில்லை யென்று தோன்றுகிறதே!

இன்னும் கொஞ்சம் ஆழ்ந்து பார்த்தால், அவர்கள் கோரிக்கை ரொம்பவும் நியாயமானது, மிக்க மிதமானது என்றல்லவா தோன்றுகிறது?

மொத்தத்தில், அவர்கள் அநியாயக்காரர்களே யில்லை யென்றும் ஏற்பட்டு விடுகிறதே!

அவர்கள் அநியாயக்காரர்கள் இல்லை யென்றால், பின் யார் அநியாயக்காரர்கள்? அவர்களுடைய நியாயமான கோரிக்கைகளை மறுப்பவர்கள் அல்லவா மகா அநியாயக்காரர்கள் என்று ஆகிறது?

இது என்ன கூத்து!

• • •

ரயில்வே ஊழியர்களின் கோரிக்கைகள் என்னவென்பதை இன்னொரு தடவை நன்றாக நிதானமாகக் கவனிப்போம். அவர்களுடைய முக்கியமான கோரிக்கை இரண்டுதான்:—

1. சம்பளத்தை அதிகப்படுத்த வேண்டும் என்பது.

2. யுத்த காலத்தில் வேலைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டவர்களை இப்போது தள்ளிவிடக் கூடாது என்பது.

சம்பளம் அதிகம் வேண்டும் என்பது ரயில்வேத் தொழிலாளிகள் புதிதாகக் கிளப்பியிருக்கும் கோரிக்கையல்ல. பல வருஷங்களாக அவர்கள் கிளர்ச்சி செய்துவரும் கோரிக்கைதான்.

ரயில்வேத் தொழிலாளிகளின் தற்போதைய சம்பள விகிதங்களைக் கேட்டால் எல்லாரும் திடுக்கிடுத்துப் போகும்படியிருக்கும்.

100-க்கு 50 பேருக்கு மேல் தொழிலாளிகள். மாதம் 17 ரூபாய்க்குக் குறைவாகச் சம்பளம் வாங்குகிறார்கள்.

ஸ்டேஷன் மாஸ்டர்கள் என்னும் பெத்த பெயருடன் விளங்கும் உத்தியோகஸ்தர்களுக்கு மாதம் 35 ரூபாய் அமோகமான சம்பளம்!

இவ்வளவு பிரமாதமான பிரம்மாண்டமான சம்பளம் வாங்குவோர் அதிக சம்பளம் கோருவது அநியாயம் என்று சொல்ல முடியுமா?

முடியாது!

இத்தனை நாளும் "யுத்தம் நடக்கிறது; பொறுத்திருங்கள்!" என்று கவர்ன்மெண்டார் சொல்லிக் காலங் கடத்தி வந்தார்கள்.

"யுத்தம் முடிந்து ஒரு வருஷம் ஆகிறதே! இன்னும் ஏன் காலம் கடத்துகிறீர்கள்?" என்று கேட்கிறார்கள்.

யுத்தத்துக்குப் பதிலாக இப்போது "பஞ்சம்" என்று காரணம் சொல்லப்படுகிறது.

ஏழைத் தொழிலாளிகளின் சொற்ப சம்பளத்தில் சொற்ப உயர்வு செய்வதற்குப் பஞ்சத்தைக் காரணமாகச் சொல்வது நியாயமா என்று பார்க்க வேண்டும்.

பஞ்சத்தை முன்னிட்டுப் பத்தாயிரம் ரூபாய் சம்பளம் வாங்கும் கவர்னர்களும் ஐயாயிரம் ரூபாய் சம்பளம் வாங்கும் ஜட்ஜுகளும் இரண்டாயிரம் மூவாயிரம் சம்பளம் வாங்கும் ஐ. ஸி. எஸ். காரர்களும் ரயில்வே ஏஜெண்டுகளும் தங்கள் சம்பளத்தைக் குறைத்துக் கொள்கிறார்களா? பிரமோஷன் கேட்காமல் இருக்கிறார்களா?

தேசத்துக்காக உயிர் உடல் பொருள் அனைத்தையும் தத்தம் செய்வதாகச் சொல்லிக்கொண்டு மாகாண மந்திரிகளாகியிருக்கும் தேச பக்தர்கள் பஞ்சத்தை உத்தேசித்துத் தங்கள் சம்பளத்தைக் குறைத்துக் கொள்கிறார்களா? ஐந்நூறு ரூபாய் சம்பளத்தை ஆயிரமாகச் செய்து கொள்கிறார்களோ, இல்லையோ?

அப்படியிருக்க, பஞ்சத்தின் பெயரால் ஏழைத் தொழிலாளிகளின் வயிற்றிலேதானா அடிக்க வேண்டும்? அவர்களைத்தானா சம்பளம் அதிகம் கேட்கக் கூடாது என்று சொல்ல வேண்டும்?

ரயில்வேத் தொழிலாளிகளின் இரண்டாவது கோரிக்கையை இந்த சந்தர்ப்பத்திலேதான் வற்புறுத்தியாக வேண்டும். அவசியமான போது வேலைக்கு வைத்தவர்களை இப்போது வேலையில்லையென்று அனுப்பிவிடப் பார்க்கிறார்கள். ரயில்வேயை விஸ்தரிப்பதற்கு இடமில்லையா? அல்லது ரயில்வேயில் பணந்தான் இல்லையா? கோடி கோடி ரூபாய் வருஷத்தில் லாபம் வரும்போது ஏழைத் தொழிலாளிகளை வீட்டுக்கு அனுப்பி வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்வானேன்?

மேற்படி பிரச்னையை இப்போது தீர்க்காமல் எப்போது தீர்ப்பது? வேலையிலிருந்து தள்ளப்பட்டவர்கள் செத்துச் சுண்ணாம்பாய்ப் போன பிறகு கிளர்ச்சி செய்து என்ன பிரயோஜனம்?

எனவே, ரயில்வேத் தொழிலாளிகளின் கோரிக்கைகள் இரண்டும் மிகவும் நியாயமானவை என்று ஏற்படுகிறது.

ஆனாலும் அந்த நியாயமான கோரிக்கைகளை வற்புறுத்தி அவர்கள் வேலை நிறுத்தம் செய்வது அநியாயம் என்று சிலர் சொல்கிறார்கள்.

பஞ்ச காலத்தில் ரயில் வேலை நிறுத்தம் நேர்ந்தால் தேசத்துக்குப் பெரிய கஷ்டம் ஏற்படும் என்பது உண்மைதான்.

ஆனால் அப்படி நேரும் வேலை நிறுத்தத்துக்குப் பொறுப்பாளி யார்?

நியாயமான கோரிக்கைகளை வற்புறுத்தும் ஏழைத் தொழிலாளிகளா? நியாயமான கோரிக்கைகளை மறுக்கும் ரயில்வே ஏஜெண்டுகளும் இந்தியா கவர்ன்மெண்டுமா?

ரயில்வே வேலை நிறுத்தம் நேருமானால் அதன் பழி பாவங்களைப் பங்கிடும்போது ஒரு விஷயத்தை நாம் ஞாபகத்தில் வைக்க வேண்டும்.

ரயில்வேத் தொழிலாளிகள், "எங்களுடைய கோரிக்கைகளை உடனே நிறைவேற்றுங்கள்; இல்லாவிட்டால் வேலை நிறுத்தம் செய்வோம்!" என்று சொல்லிப் பயமுறுத்தவில்லை.

"எங்களுடைய கோரிக்கைகளின் நியாயாநியாயங்களைப் பரிசீலனை செய்ய ஒரு நியாயாதிபதியை (அட்ஜுடிகேடரை) நியமியுங்கள்" என்றுதான் கேட்கிறார்கள்.

பத்து லட்சம் தொழிலாளரின் கோரிக்கையை நியாய பரிசீலனைக்கு விடுவதற்கு இந்தியா கவர்ன்மெண்டு மறுக்குமானால், அதைக் காட்டிலும் அநியாயம் வேறு இருக்க முடியாது.

ஆகவே, இரு தரப்பு நியாயா நியாயங்களையும் நாம் நன்றாகப் பரிசீலனை செய்து பார்த்த பிறகு, ரயில் வேலை நிறுத்தம் நேர்ந்தால், அதன் பழியை ஏழைத் தொழிலாளர் தலையிலே போட ஒரு நாளும் சம்மதிக்க மாட்டோம்.

அவர்களுடைய வெகு நியாயமான மிதமான கோரிக்கைகளை மறுப்பவர்களின் தலையிலேதான் அந்தப் பழியும் பாவமும் சுமரும் என்பதில் நமக்குச் சிறிதும் சந்தேகம் இல்லை.

எனவே, இந்தியாவை ஆட்சி புரியும் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டாருக்கு இந்த விண்ணப்பத்தைச் செய்து கொள்கிறோம்:—"இன்றைக்கு எகிப்திலிருந்து கிளம்புவது போல் கூடிய சீக்கிரத்தில் ஒரு நாள் நீங்கள் இந்தியாவிலிருந்தும் கிளம்பியே தீர வேண்டியிருக்கும். அப்படிக் கிளம்பும் போது பத்து லட்சம் ரயில்வேத் தொழிலாளிகளின் வயிற்றில் அடித்த பாவத்தையும், அதனால் பஞ்சக் கொடுமையைப் பதின் மடங்காக்கிய பழியையும் சுமந்து கொண்டு போக வேண்டாம். ஆகையால், ரயில்வேத் தொழிலாளியின் கோரிக்கைகளைப் பரிசீலனை செய்ய ஒரு நியாயாதிபதியை உடனே நியமியுங்கள். ரயில்வே வேலை நிறுத்தம் ஏற்படாமல் தடுங்கள். தேசத்தைப் பெரும் விபத்திலிருந்து காப்பாற்றுங்கள்!"

---

*சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர் ஆர். சேதுராமன், 26, 'ஜி' தெரு, அல்சூர், பெங்களூர்.*

# சிவகாமியின் சபதம்

கல்கி

## அத்தியாயம் 40

## "வெற்றி அல்லது மரணம்"

வெள்ளைக் கொடி இறக்கப்பட்டதின் பொருள் என்ன, அதன் காரணம் என்னவாயிருக்கும் என்று யோசித்தவாறு சேனாபதி பரஞ்சோதி ஒரு நிமிஷம் நின்ற இடத்திலே நின்றார். அந்த நிமிஷத்திலேயே, அவர் மனதில் உதித்த கேள்விகளுக்கு விடை சொல்வது போன்ற இந்திரஜாலக் காட்சி கோட்டை மதில் நெடுகக் காணப்பட்டது. இத்தனை நாளும் வெறுமையாயிருந்த அந்த நெடிய விசாலமான மதிளின் மீது கையில் வேல் பிடித்த சளுக்க வீரர்கள் வரிசையாக நின்றார்கள். மாலை வேளையின் மஞ்சள் வெயிலில் அவர்கள் தலையில் அணிந்திருந்த இரும்புத் தொப்பிகளும், மார்பில் அணிந்திருந்த செப்புக் கவசங்களும், கையில் பிடித்த வேல்களின் கூரிய முனைகளும் பளபள வென்று ஒளி வீசித் திகழ்ந்தன.

"மகா ராஜாதி ராஜ சளுக்ககுல திலக திரிபுவன சக்கரவர்த்தி சத்யாச்ரய புலிகேசி நீடூழி வாழ்க!" என்று ஒரு இடிமுழக்கக் குரல் ஒலிக்க, அதைத் தொடர்ந்து, "ஜயவிஜயீபவ!" என்று ஆயிரக் கணக்கான குரல்கள் ஏக காலத்தில் ஆர்ப்பரித்தன.

அந்த அதிசயக் காட்சியைப் பார்த்துக் கொண்டு சேனாபதி பரஞ்சோதி சிறிது நேரம் திகைப்புற்று நின்றார். "அதோ! அதோ!" என்று அவர் பக்கத்திலிருந்த வீரர்களில் ஒருவன் கூவிய வண்ணம் கோட்டை முன் வாசலின் உச்சியைச் சுட்டிக் காட்டினான். அங்கே, நெடிதுயர்ந்த கம்பீர உருவம் ஒன்று நின்று சுற்று முற்றும் பார்த்துக் கொண்டிருந்தது. ஆ! அந்த உருவம் புலிகேசி சக்கரவர்த்தியினுடையதுதான், சந்தேகமில்லை!

வெள்ளைக் கொடி இறங்கியதன் தாத்பரியம் பரஞ்சோதிக்கு அந்தக் கணமே நன்கு விளங்கி விட்டது. புலிகேசி சக்கரவர்த்தி யுத்தகளத்திலிருந்து தப்பிப் பிழைத்து இரகசியச் சுரங்க வழி மூலமாகவோ, அல்லது இரவு வேளையில் பல்லவ வீரர் காவலை மீறி மதிள் ஏறிக் குதித்தோ, கோட்டைக்குள்ளே வந்து சேர்ந்து விட்டார். சமாதானம் என்ற பேச்சு இனி இல்லை. யுத்தம் செய்தேயாகவேண்டும். கோட்டையைத் தாக்கியே தீர வேண்டும். இன்னும் ஆயிரமாயிரம் மனிதர்களின் இரத்தம் வெள்ளமாக ஓடியேயாகவேண்டும். வாதாபி நகரம் தீப்பட்டு எரிந்தே தீரவேண்டும்.

இப்படிச் சேனாபதி எண்ணமிட்டுக் கொண்டிருக்கையில் கோட்டை வாசல் உச்சியிலிருந்து திடீரென்று ஓர் அம்பு ஜிவ்வென்று பறந்து வந்தது. பரஞ்சோதியின் தலைக்கு நேராக அந்த அம்பு வந்ததைப் பார்த்து அருகில் நின்ற வீரர்கள் ஹா ஹா காரம் செய்தார்கள். ஒரு க்ஷண நேரம் அவர்கள் அவ்வளவு பேருக்கும் நெஞ்சடிப்பு நின்று போயிருந்தது. நல்ல வேளையாக அந்த அம்பு சேனாபதி பரஞ்சோதியின் தலைக்கு மேலே ஒரு சாண் உயரத்தில் பாய்ந்து சென்று அவருக்குப் பின்னால் பூமியில் பாய்ந்து குத்திட்டு நின்றது.

மற்றவர்கள் எல்லாரும் திகிலடைந்த போதிலும் சேனாபதி ஒரு சிறிதும் கலங்கவில்லை. முகத்தில் புன்னகையுடன் தரையில் பாய்ந்த அம்பை எடுக்கும்படி கட்டளையிட்டார். அதன் இறகில் ஒரு சிறு ஓலைச் சீட்டு கட்டியிருந்தது. அதை எடுத்துப் பரஞ்சோதி படித்தார். "வெற்றி அல்லது மரணம்" என்று அதில் எழுதியிருந்தது.

பரஞ்சோதியின் இருதயத்திலிருந்து ஒரு பெரிய பாரம் இறங்கியது போல் இருந்தது. அவருடைய உள்ளத்திலே

நடந்து கொண்டிருந்த போராட்டத்திற்கு இனி இடமில்லை. மாமல்லரோடு வாதம் செய்ய வேண்டிய அவசியமும் இல்லை. மீண்டும் யுத்தம் தொடங்கி இரத்த வெள்ளத்தைப் பெருக்கும் பொறுப்பு புலிகேசியின் தலைமேல் விழுந்துவிட்டது. இனிமேல் மனத்தில் சஞ்சலம் எதுவும் இன்றிக் கோட்டைத் தாக்குதலை நடத்தலாம்.

பரஞ்சோதி மேற்படி தீர்மானத்துக்கு வந்ததும், பக்கத்தில் நின்ற வீரனைப் பார்த்து, "சடையா! அதோ அந்தக் கோட்டை வாசலில் உள்ள கணபதி விக்கிரகம் கண்ணுக்குத் தெரிகிறதா?" என்று கேட்டார்.

"தெரிகிறது, சுவாமி! தாங்கள் அந்த விக்கிரகத்தின் அருகில் நின்று பார்த்தபோது நானும் கவனித்தேன்!" என்றான் சடையன்.

"நல்லது; உனக்கு மிகவும் முக்கியமான காரியம் ஒன்றைத் தருகிறேன். சூரியன் அஸ்தமித்து நன்றாக இருட்டியதும் நீயும் இன்னும் பத்து வீரர்களும் மதிள் சுவர்மீது நிற்கும் சளுக்க வீரர் கண்ணில் படாமல் கோட்டைவாசலுக்குப் போகவேண்டும். போய் அந்தக் கணபதி விக்கிரகத்துக்கு ஒருவிதச் சேதமும் ஏற்படாமல் பெயர்த்து எடுத்து என்னுடைய கூடாரத்துக்குக் கொண்டு வரவேண்டும். தெரிகிறதா? நீ அந்த விக்கிரகத்தைப் பத்திரமாகக் கொண்டு வந்து சேர்ப்பதைப் பொறுத்துத்தான் நமக்கு இந்தக் கடைசி யுத்தத்தில் வெற்றி ஏற்பட வேண்டும்!" என்றார் சேனாபதி.

"அப்படியே, சேனாபதி! விநாயகரின் விக்கிரகத்தைச் சர்வ ஜாக்கிரதையாகக் கொண்டு வந்து கூடாரத்தில் சேர்க்கிறேன்!" என்றான் சடையன்.

உடனே சேனாபதி பரஞ்சோதி குதிரையைத் திருப்பிக்கொண்டு மாமல்ல சக்கரவர்த்தி தங்கியிருந்த கூடாரத்தை நோக்கி விரைந்து சென்றார்.

* * *

சக்கரவர்த்தியின் கூடாரத்தில் ஏற்கெனவே மற்றத் தளபதிகள் எல்லாரும் வந்து சேர்ந்திருந்தார்கள். முடிவான கட்டளையைச் சக்கரவர்த்தியிடம் பெற்றுக்கொண்டு போவதற்காக அவர்கள் வந்திருந்தார்கள். சேனாபதி பரஞ்சோதியின் வருகைக்காகச் சக்கரவர்த்தி காத்துக் கொண்டிருந்தார். அவர் முகத்தில் அமைதி குடி கொண்டிருந்தது. தமக்கு அருகில் நின்றவர்களிடம் அவர் சாவதானமாகப் பேசிக் கொண்டிருந்தார். கோட்டை வாசலில் பறந்த வெள்ளைக் கொடி இறக்கப்பட்ட விவரமும், மதிள் சுவரின்மேல் சளுக்க வீரர் போருக்கு ஆயத்தமாய் நின்றதும் அங்கிருந்தவர்களுக்கு இன்னும் தெரியாது. சளுக்க வீரரின் யுத்த கோஷத்தை அவர்கள் பல்லவ வீரரின் கோஷம் என்று எண்ணிக் கொண்டிருந்தார்கள்.

அவ்விதம் அமைதி குடிகொண்டிருந்த சக்கரவர்த்தியின் சந்நிதானத்தில் பரஞ்சோதி புயல் நுழைவது போல் நுழைந்து முதலில் சக்கரவர்த்திக்கு வணக்கம் செலுத்தினார்.

"பிரபு!........." என்று அவர் மேலும் பேசுவதற்குள்ளே, மாமல்லர் குறுக்கிட்டுக் கூறினார்.

"சேனாபதி! ஏன் இவ்வளவு பரபரப்பு? இந்த மூன்று நாளும் சிந்தனை செய்ததில் உம்முடைய யோசனைதான் நியாயத்துக்கும் தர்மத்துக்கும் உகந்தது என்ற முடிவுக்கு வந்தேன். கோட்டையின் சரணாகதியை ஒப்புக்கொண்டு யுத்தத்தை நிறுத்துவது என்று முடிவு செய்து விட்டேன்!" என்றார்.

இதைக் கேட்ட சேனாபதி முன்னைக் காட்டிலும் அதிக பரபரப்பை அடைந்து கண்ணில் நீர் ததும்பத் தொண்டை அடைக்க, "பிரபு! நான் அறிவீனன். நான் சொன்ன யோசனை சுத்த அபத்தம். தாங்கள் முதலில் இட்ட கட்டளைதான் நியாயம், தர்மம் எல்லாம். என் யோசனைப்படி மூன்று நாள் தாமதித்ததே பெரும் தவறு. பிரபு! கோட்டை வாசலில் வெள்ளைக் கொடி இறங்கி விட்டது. மதிள் சுவர் மேல் சளுக்க வீரர் போர்க்கோலம் பூண்டு நிற்கிறார்கள்......" என்று கூறவும், அங்கிருந்தவர்கள் அனைவரும் அளவற்ற வியப்பும் பரபரப்பும் அடைந்தார்கள்.

சக்கரவர்த்தி தாம் வீற்றிருந்த ஆசனத்திலிருந்து துள்ளிக் குதித்து எழுந்து, "சேனாபதி! நீர் சொல்வது உண்மைதானா?" என்றார்.

"உண்மை, பிரபு! என் கண்ணா
லயே பார்த்தேன்! பார்த்துவிட்டு
நரே இவ்விடம் வருகிறேன்!"

"இந்த மாறுதலுக்குக் காரணம்
ன்னவென்று ஏதேனும் ஊகிக்க
டிகிறதா?" என்றார் மாமல்லர்.

"ஊகம் வேண்டியதில்லை, பிரபு!
லிகேசி போர்க்களத்தில் சாகவில்லை.
ப்பிப் பிழைத்துக் கோட்டைக்குள்
ப்படியோ வந்து விட்டான்.
காட்டை வாசல் உச்சியில் வாதாபி
க்கரவர்த்தி நின்று நமது சைன்யத்
தைப் பார்வை யிட்டதையும் நான்
ண்ணால் பார்த்தேன். சந்தேகத்துக்கு
டமில்லாதபடி இதோ புலிகேசி
ன் ஓலையும் இருக்கிறது. அம்பின்
றகிலே கட்டி இந்த ஓலை எனக்குக்
டைத்தது!" என்று சொல்லி,
வெற்றி அல்லது மரணம்" என்று
ழுதியிருந்த ஓலைத் துண்டைச் சக்கர
ர்த்தியிடம் பரஞ்சோதி காட்டினார்.

"ரொம்ப நல்லதாய்ப் போயிற்று.
ாதாபிக்கு நேரும் கதிக்குப் பாவம்
தி எல்லாம் அவன் தலைமேல்!"
ன்று மாமல்லர் உற்சாகமான குர
ல் கூறிவிட்டு, "சேனாபதி! இனிமேல்
ந்தேகம் ஒன்றுமில்லையே? கோட்டை
யத் தாக்க ஆரம்பிக்கலாமல்லவா?"
ன்று கேட்டார்.

"இனி ஒரு சந்தேகமும் இல்லை,
ரபு! எல்லாம் ஆயத்தமாயிருக்
றது. இன்னும் ஒரு முகூர்த்த நேரத்
ல் நமது யானைப்படை கோட்டைவாச
த் தகர்க்க ஆரம்பித்துவிடும்! நமது
ரர்கள் கோட்டை மதிளைத் தாண்டி
ள்ளே பிரவேசிக்க ஆரம்பித்து
டுவார்கள்!" என்றார் சேனாபதி.

பின்னர், அங்கு நின்ற தளபதி
ளைப் பார்த்து, "எல்லாரும் அவ
வர்களுடைய படைகளுக்குச் செல்
ங்கள். நகரத்துக்குள்ளே எப்படி
டந்துகொள்ள வேண்டும் என்பதை
ன்னொரு தடவை நமது வீரர்களுக்
கெல்லாம் ஞாபகப் படுத்துங்கள்.
பரிகை முழக்கம் கேட்டதும் புறப்
டுவதற்கு ஆயத்தமாயிருங்கள்!"
ன்றார்.

இதைக் கேட்டதும் அங்கு நின்ற
ளபதிகள் எல்லாரும் சக்கரவர்த்
க்கும் சேனாபதிக்கும் வணக்கம்
செலுத்தி விட்டு விரைந்து வெளியேறி
னார்கள். சக்கரவர்த்தியும், அவருடைய
மெய்க் காவலர் இருவரும், மானவன்
மரும், பரஞ்சோதியும் மட்டும் அங்கு
மிச்சமிருந்தார்கள்.

"சேனாபதி! நகரத்துக்குள் நடந்து
கொள்ள வேண்டியது பற்றி நம் வீரர்
களுக்கு என்ன கட்டளையிட்டிருக்
கிறீர்கள்?" என்று கேட்டார்.

"பிரபு! குழந்தைகளுக்கும் ஸ்திரீ
களுக்கும் எந்த விதத்திலும் துன்ப
முண்டாக்கக் கூடாது என்று கட்டளை
யிட்டிருக்கிறேன். ஆண் மக்களில்
எதிர்த்தவர்களையெல்லாம் கொன்று
விடும்படியும் பணிந்தவர்களையெல்
லாம் சிறைபிடிக்கும்படியும் கட்டளை
யிட்டிருக்கிறேன். வாதாபி நகரில் ஒரு
வீடு மிச்சமில்லாமல் எரிந்து சாம்ப
ராக வேண்டுமென்று கட்டளை யிட்
டிருக்கிறேன். தீயை அணைக்க முயல்
வோரையெல்லாம் கொன்றுவிடும்படி
சொல்லியிருக்கிறேன். நகரை விட்டு
ஓட முயற்சிக்கும் பிரஜைகளைப் போக
விடும்படியும், ஆனால் அவர்கள் எந்த
விதமான பொருளையும் கொண்டு
போகவிடக் கூடாதென்றும் ஆக்ஞை
யிட்டிருக்கிறேன். நம்முடைய வீரர்கள்
வாதாபி நகரிலிருந்து அவரவர்களால்
முடிந்த வரையில் பொருள்களைக்
கொண்டுவந்து சேர்க்க வேண்டுமென்
றும் ஒவ்வொருவரும் கொண்டு வரு
வதில் பாதிப் பொருளை அவர்களுக்கே
திருப்பிக் கொடுக்கப்படும் என்றும்
சொல்லியிருக்கிறேன். இன்னும்
ஏதேனும் கட்டளையிருந்தால் தெரியப்
படுத்த வேண்டும்" என்றார் பரஞ்
சோதி.

"சேனாபதி! நான் சொல்வதற்கு
ஒரு விஷயமாவது மிச்சம் வைக்க
வில்லை. எல்லாம் முன் யோசனை
யுடன் செய்திருக்கிறீர்கள்!" என்றார்
மாமல்லர்.

"பிரபு! இன்னும் ஒரு முக்கியமான
காரியம் இருக்கிறது. அதை நமது
இலங்கை இளவரசருக்கென்று வைத்
திருக்கிறேன். தாங்கள் கட்டளை பிறப்
பிக்க வேண்டும்!" என்றார்.

மாமல்லர் மறுமொழி சொல்வ
தற்குள்ளே, "சேனாபதியின் கட்டளைக்
குக் காத்திருக்கிறேன்!" என்றார்
மானவன்மர்.

"வாதாபி சக்கரவர்த்தியின் அரண்
மனையில் உலகத்திலே வேறு எந்த

நாட்டு அரசர் அரண்மனையிலும் இல்லாத செல்வங்கள் இருப்பதாகக் கேள்விப் பட்டிருக்கிறேன். கன்னோசி ஹர்ஷவர்த்தனர் ஐந்து வருஷத்துக்கொரு தடவை தமது செல்வங்களையெல்லாம் பிரஜைகளுக்குத் தானம் செய்து விடுகிறார். மகா லோபியான புலிகேசி அப்படியெல்லாம் செய்வதில்லை. முப்பது வருஷமாகச் சேகரித்த குபேர சம்பத்துக்கள் புலிகேசியின் அரண்மனையில் இருக்கின்றன. அந்தச் செல்வங்களைப் பத்திரமாய்ப் பாதுகாத்துக் கொண்டு வரவேண்டிய பொறுப்பை மானவன்மர் ஏற்றுக் கொள்ள வேண்டும். எல்லாச் செல்வங்களையும் அப்புறப்படுத்தி விட்டுப் பிறகுதான் அரண்மனையை எரிக்: வேண்டும். இந்தக் காரியத்தில் மான வன்மருக்கு ஒத்தாசை செய்ய ஐயா யிரம் வீரர்களைத் தனியாக வைத் திருக்கிறேன்."

இதை யெல்லாம் மாமல்லரைட் பார்த்தே சேனாபதி கூறினார்.

"சேனாபதி! தங்கள் விருப்பத்தை மானவன்மர் நிறைவேற்றுவார் ஆனால், வாதாபி நகருக்குள்ளே அரண்மனைச் செல்வங்களைத் தவிர



காப்பாற்ற வேண்டிய செல்வம் வேறொன்றுமில்லையா? அதைப்பற்றி என்ன ஏற்பாடு செய்திருக்கிறீர்கள்?" என்று மாமல்லர் கேட்டபோது அவருடைய குரல் கம்மிற்று.

சிவகாமி தேவியைப் பற்றித்தான் சக்கரவர்த்தி கேட்கிறார் என்று பரஞ்சோதி தெரிந்து கொண்டார்.

"பிரபு! அந்தப் பொறுப்பை மட்டும் அடியேன் வைத்துக்கொண்டிருக்கிறேன். வேறு யாரிடமும் அதை ஒப்புவிக்க விருப்பமில்லை" என்றார்.

"ரொம்ப நல்லது; சத்ருக்னன் இது வரையில் செய்தி ஒன்றும் கொண்டு வரவில்லையா?"

"ஒவ்வொரு கணமும் அவனை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறேன்."

"சேனாபதி! எல்லாருக்கும் கட்டளையிட்டீர். எனக்கு மட்டும் ஒரு வேலையும் தரவில்லையே? நான் என்ன செய்யட்டும்?"

"பிரபு! தாங்கள் இங்கேயே, இந்தக் கூடாரத்திலேயே இருக்க வேணும் என்பது அடியேன் பிரார்த்தனை."

"வாதாபி நகரத்துக்குள் நான் வரவே வேண்டாமா?"

"அவசியமானால் சொல்லியனுப்புகிறேன். உடனே வந்து சேர ஆயத்தமா யிருக்க வேணும். இப்போது என்னுடன் கண்ணனை ரதத்துடன் அனுப்பி வைக்க வேணும்!"

"அப்படியே அழைத்துக் கொண்டு போங்கள். இங்கே நான் முள்ளின் மேல் இருப்பது போலத்தான் இருப்பேன். ஞாபகம் இருக்கட்டும்!"

"பிரபு! விக்னேசுவரப் பெருமானின் கருணையால் எல்லாம் நன்றாக முடியும். கவலைப்பட வேண்டாம். அவசியம் ஏற்பட்டதும் உடனே சொல்லி அனுப்புகிறேன். இப்போது விடை கொடுங்கள்."

"போய் வாருங்கள், சேனாபதி! வழக்கம்போல் வெற்றி மாலை சூடித் திரும்புங்கள்!"

சேனாபதி விரைந்து கூடாரத்திலிருந்து சென்றார். அவர் போனவுடன் சக்கரவர்த்தி, "இது என்ன, திடீரென்று விக்னேசுவரக் கடவுளிடம் இவருக்கு இவ்வளவு பக்தி உண்டாகி விட்டது!" என்று எண்ணி வியந்தார்.

## அத்தியாயம் 41

# சத்ருக்னன் பீதி

சக்கரவர்த்தியிடம் சேனாபதி கூறிய வண்ணமே அன்று சூரியன் அஸ்தமித்து ஒரு முகூர்த்த நேரத்துக்கெல்லாம் யுத்த பேரிகை முழங்கியது. வாதாபிக் கோட்டையைச் சுற்றி நாலாபுறமும் சூழ்ந்திருந்த பல்லவ வீரரின் மகா சைன்யம் இடம் பெயர்ந்து கோட்டை மதிலை நோக்கி முன்னேறத் தொடங்கியது. காற்றில் அசைந்தாடும் கொடிகளாகிற அலைகளோடு கூடிய அந்தச் சேனா சமுத்திரமானது வாதாபிக் கோட்டையை மூழ்கடிக்கும் நோக்கத்துடன் பொங்கி முன்னேறுவது போலக் காணப்பட்டது.

பல்லவ சைன்யத்தின் யானைப் படையானது கோட்டை வாசல்களையும் நோக்கிச் சென்ற காட்சி கருங் குன்றுகள் இடம் பெயர்ந்து செல்லும் காட்சியை ஒத்திருந்தது.

இந்தச் சந்தர்ப்பத்துக்காகவே வெகு நாளாகப் பயிற்சி பெற்றுக் காத்துக் கொண்டிருந்த பிரம்மாண்டமான யானைகள் துதிக்கைகளில் இரும்புலக்கைகளையும் வைரம் பாய்ந்த மரத் தூண்களையும் தூக்கிக் கொண்டு அசைந்து அசைந்து சென்ற போது பூமி அதிர்ந்தது. புழுதிப் படலங்கள் கிளம்பி வானத்தை மறைத்தன.

ஒரு லட்சம் வீரர்களும் பத்தாயிரம் யானைகளும் சேர்ந்தாற்போல் இடம் பெயர்ந்து சென்றபோது ஏற்பட்ட ஓசையானது சண்டமாருதம் அடிக்கும் போது சமுத்திரத்தில் உண்டாகும் கோஷத்தை ஒத்திருந்தது.

சற்று நேரம் வரையில் அவ்வளவு சைன்யமும் இருட்டிலேயே இடம் பெயர்ந்து சென்றன. திடீரென்று இங்கொன்று அங்கொன்றாகத் தீவர்த்திகளும் தீபந்தங்களும்

தோன்றலாயின. கொஞ்ச நேரத்துக்கெல்லாம் அவை பத்து, நூறு, ஆயிரம், பதினாயிரம் என்று கணக்கில் எரியத் தொடங்கின. அந்தத் தீவர்த்திகளிலும் தீப்பந்தங்களிலும் எழுந்த புகை நாலாபுறமும் பரவிச் சூழ்ந்து ஒரு பயங்கரமான மாயா லோகக் காட்சியை அளித்தது.

சேனாபதி பரஞ்சோதி தமது கூடாரத்துக்கு வெளியில் நாலா புறமும் பார்த்துக் கொண்டிருந்தார். அவர் அமைதியின்றி அங்கு மிங்கும் நடந்ததையும் கத்தியினால் பூமியைக் கீறிக் கோலம் போட்டதையும் பார்த்தால் அவர் யாரையோ எதையோ எதிர்பார்த்துக் கொண்டிருந்ததாகத் தோன்றியது. அப்போது சடையனும் இன்னும் நாலு பேரும் வாதாபிக் கோட்டை வாசலிலிருந்த கணபதியைத் தூக்கிக்கொண்டு வந்து சேர்ந்தார்கள். விக்கிரகத்தைக் கூடாரத்துக்குள் கொண்டு போய் வைக்கும்படி பரஞ்சோதி கட்டளையிட்டார். அவர்கள் பின்னால் பரஞ்சோதியும் உள்ளே சென்று சடையனைப் பார்த்து, "அப்பனே! நீயும் உன்னுடைய ஆட்களும் இங்கேயே இருந்து இந்தக் கணபதிராயனைப் பத்திரமாய்ப் பாதுகாக்கவேணும். என்னுடைய மனோரதம் நிறைவேறினால், சிவகாமி தேவிக்கு எவ்விதத் தீங்கும் நேரிடாமல் வாதாபிக் கோட்டைக்குள்ளேயிருந்து பத்திரமாய்க் கொண்டு சேர்த்தேனானால், இந்த விநாயகப் பெருமானை என் கிராமத்துக்குக் கொண்டுபோய்க் கோவில் கட்டி வைத்துத் தினம் மூன்று வேளை பூஜை செய்விப்பதாக வேண்டிக் கொண்டிருக்கிறேன்!" என்றார்.

மீண்டும் அவர், "சடையப்பா! இங்கே இருந்து நீங்கள் இந்த விக்கிரகத்தைக் காத்துக் கொண்டிருப்பதினால் வாதாபி கொள்ளையில் உங்களுக்குப் பங்கு இல்லாமல் போய்விடும். அதற்கு நான் ஈடு செய்து கொடுக்கிறேன்!" என்று கூறினார்.

"சுவாமி! தங்கள் சித்தம் எங்கள் பாக்கியம். ஆக்ஞை எப்படியோ அப்படியே நடந்து கொள்கிறோம்!" என்றான் சடையப்பன்.

சேனாபதி பரஞ்சோதி பின்னர் கணபதியின் விக்கிரகத்தை நோக்கிக் கை கூப்பிக் கண்களை மூடிக்கொண்டு பிரார்த்தனை செய்தார்.

அதே சமயத்தில் வெளியில் யாரோ ஓடிவரும் சத்தம் கேட்டது. அடுத்த கணம் சத்ருக்னன் தலைவிரி கோலமாய்க் கூடாரத்துக்குள்ளே ஓடி வந்தான். அவனுடைய முகம் பேயடித்தவன் முகம்போலிருந்தது. சொல்ல முடியாத பயங்கரமும் பீதியும் அதில் குடிகொண்டிருந்தது.

பரஞ்சோதி அவனைத் திரும்பிப் பார்த்து, "சத்ருக்னா! இது என்ன கோலம்? ஏன் இப்படிப் பீதி கொண்டவனைப்போலிருக்கிறாய்? ஏதாவது பெரிய ஆபத்து நேர்ந்ததா? போன காரியத்தில் வெற்றி கிடைக்கவில்லையா?" என்று கேட்டார்.

"சேனாபதி! என் வாழ்க்கையில் எத்தனையோ பயங்கரமான ஆபத்துக்களில் சிக்கிக்கொண்டிருக்கிறேன். ஆனால் நேற்றும் இன்றும் எனக்கு ஏற்பட்ட ஆபத்தைப் போல் இது வரையில் ஏற்பட்ட இல்லை" என்று சொல்லிவிட்டுப் பக்கத்தில் நின்றவர்களைப் பார்த்தான்.

அந்தக் குறிப்பை உடனே உணர்ந்து சேனாபதி அவர்களை வெளியில் போகச் சொன்னார். அவர்கள் போனவுடனே சத்ருக்னனைப் பார்த்து, "சத்ருக்னா! கோட்டையைத் தாக்க ஆரம்பித்தாகிவிட்டது. சிறிதும் தாமதிக்க நேரமில்லை. உன்னுடைய கதையைச் சுருக்கமாகச் சொல்லி முடி! போன காரியத்தில் வெற்றியடைந்தாயா, இல்லையா? அதை முதலில் சொல்!" என்றார்.

"சேனாபதி! கோட்டைக்குள் போக இரகசியச் சுரங்க வழி இருக்கிறது. அது இருக்குமிடத்தையும் கண்டுபிடித்து விட்டேன். ஆனால் அதன் வழியாகக் கோட்டைக்குள் போவது சுலபமான காரியமில்லை. கோட்டைத் தாக்குதலோ ஆரம்பமாகி விட்டது. இனிச் சுரங்க வழியில் போய்த்தான் என்ன பிரயோஜனம்? எல்லாவற்றிற்கும் தங்களிடம் யோசனை கேட்டுக் கொண்டு போக வந்தேன்!" என்று சொல்லி விட்டுத் தன் வரலாற்றைச் சுருக்கமாகக் கூறினான்.



# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி

## 141. கும்பிடுகிறேன், சொல்லாதேயுங்கள்!

திரிசிரா, சேனைத் தலைவன் என்பது நமக்குத் தெரியும். தலை அறுபட்டு அவன் மண்ணில் வீழ்ந்தானோ இல்லையோ அரக்கர்கள் எல்லாரும் ஓட ஆரம்பித்தார்கள். திரிசிராவின் சகாவான தூஷணன் தடுத்தான். தடுத்தும் நின்ற பாடாக இல்லை. ஆனால் அவர்களால் ஓட முடிந்ததோ: அதுவும் இல்லை.

திரிசி ரானும்
சிகரம்மண் சேர்தலும்,
செறிந் த
நிருதர் ஓடினர்,
தூடணன் விலக்கவும்
நில் லார்,—
பரிதி வானினர்
கேடகந் தடக்கையர்
பறந் த
குருதி நீரிடை
வார்கழல் கொழுங்குடர்
தொடக் க

[திரிசிரா எனும் சிகரம் மண்சேர்தலும் — சேனையின் இடையே திரிசிரா நின்றது மலைச் சிகரம் ஒன்று நின்ற மாதிரி இருந்தது — அவன் மண்ணில் விழுந்தது மலைச் சிகரம் விழுந்தது போலவே இருந்தது: செறிந்த நிருதர் ஓடினர்: நெருங்கி நின்ற அரக்கர் முதுகு காட்டி ஓட்டம் பிடித்தனர்: தூடணன் விலக்கவும் நில்லார்: தூடணன் தடுக்கவும் நில்லாதவர்களாய்—ஓடினர்; பரிதி வானினர் கேடகந் தடக்கையர் பறந்த: சூரியன் போலப் பிரகாசிக்கும் வாளைப் பற்றிய கையினராயும், கேடகத்தை அப்படியே பிடித்த கையினராயும் அரக்கர் இறந்து ஆங்காங்கு கிடந்தனர்; குருதி நீரிடை: அந்த இரத்தப் பெருக்கில்; வார்கழல்: ஓடப் பார்த்த தங்கள் கால்களிலுள்ள கழல்கள்; கொழுங்குடர் தொடக்க: இறந்து பட்டவர்களது பருத்த குடலிற் சிக்கிக் கொள்ளும்படியாக — நிருதர் ஓடினர்.]

அரக்கப் படையினர் இவ்விதமாகச் சிக்குண்டு ஓட முடியாமல் நிற்கிறார்கள். இப்படி நிற்பவர்கள் போக ஓடிய சிலர் காலில் இறந்து பட்டவர்களது அரைக் கச்சையும் அதில் கட்டிய வாளும் காலைத் தொடர்ந்து வந்து காலை அறுக்கின்றன: அதை உணர வில்லை அவர்கள். அவ்வளவு பயம் அவர்களுக்கு!

கச்சும் வாளுந்தம்
கால்தொடர்ந்(து) ஈர்வன
கா ணார்;
அச்சம் என்பதொன்(று)
உருவுகொண் டாலென
அழி வார்;
உச்ச வீரன்கைச்
சுடுசரம் நிருதர்நெஞ்(சு)
உரு வத்
தச்சு நின்றன
கண்டவர்,—அவ்வழித்
தவிர்ந் தார்

[உச்ச வீரன் கைச்சுடு சரம்: வீராதி வீரனுயுள்ள ராமனது கையிலிருந்து வந்த கொடிய அம்பு; நிருதர் நெஞ்சு உருவத் தச்ச நின்றன கண்டனர்: அரக்கரது மார்பில் தைத்து முதுகுப்புறம் தெரியும்படியாக ஊடுருவி நின்ற உயிரற்ற உடல்களைக் கண்டனர்: அந்த வழியை விட்டு விலகி வேறு வழியாக ஓடினார்கள் — அந்த உடல்களைக் கண்டதில் அவ்வளவு பயம்!

குறிப்பு:—அச்சம் என்பது உள்ளத்தில் நிகழ்வது. ஆனாலும் மெய்ப்பாடுகளினால் நன்றாய்த் தெளிவாகக் காணக் கூடிய விஷயமே. அச்சத்துக்குரிய அம்சங்களை எல்லாம் அப்படி




உபாத்தியாயரின் கேள்விக்குக் கெட்டிக்காரப் பையன் சித்திரத்தின் மூலமாகவே பதில் அளிக்கிறான். —சாமி.

அப்படியே செதுக்கிய உயர்ந்த ஓவியங்கள் போல் இருந்ததாம். அரக்கரது தோற்றம் பாவம் கொண்ட சிற்பங்களை எவ்வளவு அழுத்தமாய் அனுபவித்திருக்கிறார் என்பது தெரிகிறது.]

வேறு சில அரக்கர்கள் பய வெறியினால் இன்னது செய்வது என்று தெரியாமல் என்னவெல்லாமோ செய்கிறார்கள்—வடிகட்டின பைத்தியங்கள்!

மண்டி ஓடினர்
சிலர், நெடுங் கடகளி
வயிற் றில்
புண்தி றந்தமா
முழையிடை வாளொடும்
புகு வார்!
தொண்டை நீங்கிய
கவந்தத்தைத் 'துணைவ, நீ
எம் மைக்
கண்டி லேன்' எனப்
புகல்எனக் கைதலைக்
கொள் வார்!!!

[மண்டி ஓடினர் சிலர்: நெருங்கி ஒருவரை யொருவர் இடித்துக்கொண்டு ஓடினர் வேறு சில அரக்கர்கள்; நெடுங்கடகளி: மிகப்பெரிய யானையின்; புண் திறந்தமா முழையிடை: குகை போல மிகவாக விரிந்த புண் வாயிடை; வாளொடும் புகுவார்: ஒளிந்து கொள்வதற்காக வாளை வெளியே போட்டுவிடலாம் என்ற நினைவுகூட இல்லாமல், வாளைக் கையில் பிடித்த வண்ணமாகவே புண் வாய்க்குள் நுழையப் பார்க்கிறார்கள்; கவந்தம்: தலை நீங்கி நிற்கும் பிரேத உடல்; துணைவ: சிநேகிதனே—தலையில்லை என்பதைக் கண்டும் பய வெறியினால் கவந்தத்தோடு உரையாடுகிறார்கள்; புகல்: யாராவது தளகர்த்தர்கள் கேட்டால் சொல்லு; எனக் கைதலைக் கொள்வார்: என்று சொல்லிக் கொண்டு தலையின் மேல் கைகூப்பியவர்களாய்க் கும்பிடுகிறார்கள்.]

கதாநாயகன் ராமனது வில்லின் திறத்தைக் கவிஞர் நமக்குப் பல விதமாக எடுத்துக் காட்டுகிறார். பகைவர் எல்லாரும் இறந்து அப்படியே மாண்டார்கள் என்று சொல்லுவது ஒன்று. வீராவேசத்தோடு எதிர்த்துக் கடைசியில் மாண்டார்கள் என்று சொல்லுவதும் ஒரு வகை. மேலே சொன்ன பாடல்களில் ராமபாணத்துக்குப் பயந்து பகைவர்கள் ஓடினார்கள். அந்த பயம் எப்படி எப்படி எல்லாம் தொழிற்பட்டது என்று வர்ணிப்பது ஒரு தனியான வகை. பயத்தோடும் அரக்கரைத் தூஷணன் தடுத்தானே, இனி என்ன செய்கிறான் என்று பார்க்கலாம்.



# ஆடல் பாடல்



## கர்நாடகம்

கர்நாடக சங்கீதக் கலைக்கு ஒரு சமயம் தஞ்சாவூர் தலைமை ஸ்தானமாக இருந்தது. சில வருஷங்களுக்கு முன்னால் அதன் தலைமை ஸ்தலம் சென்னை நகருக்கு மாறியது. சமீபகாலத்தில் அந்தப் பெருமைக்குச் சென்னையோடு திருவாங்கூர் போட்டி போட்டுக் கொண்டிருக்கிறது.

ஆனால் உண்மையில் கர்நாடக சங்கீதத்தின் தலைமை ஸ்தலம் சென்னையுமல்ல, திருவாங்கூருமல்ல — பம்பாய் நகரந்தான் என்று கூடிய சீக்கிரத்தில் ஏற்படுமானால், அதைப் பற்றி வியப்படைவதற்கில்லை.

சென்ற ஏப்ரல் மீ 28உ பம்பாயில் ஸ்ரீ தியாகராஜஸ்வாமி உற்சவக் கைங்கரிய நிமித்தமாக நடைபெற்ற ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் சங்கீதக் கச்சேரியைப் பற்றி நேயர்கள் தினசரிப் பத்திரிகைகளில் படித்திருப்பார்கள். மேற்படி கச்சேரி சம்பந்தமான காரியங்களைக் கவனிப்பதற்காக ஒரு விசேஷக் கமிட்டி பம்பாயில் ஏற்பாடாகி யிருந்தது. இரண்டு வருஷத்துக்கு முன்பு அகில இந்திய சங்கீத மகா சபையைச் சிறப்பாக நடத்தி அதன் பலனாகக் கர்நாடக சங்கீதத்தில் விசேஷ அபிமானம் பெற்றுவிட்ட ஸ்ரீ சம்பக்லால் மோடி (பம்பாய் ஸிவில் கோர்ட் ஜட்ஜு) மேற்படி கமிட்டியின் தலைவர். தென்னிந்தியப் பிரமுகர்கள் பலர் கமிட்டியில் அங்கத்தினரா யிருந்து அவருடன் ஒத்துழைத்தார்கள். கச்சேரிக்கு முன்பு பத்து தினங்கள் பம்பாய்ப் பத்திரிகைகளில்,—ஆங்கிலம் குஜராத்தி மகாராஷ்டிர பாஷைப் பத்திரிகை எல்லாவற்றிலும், — ஸ்ரீ தியாகராஜஸ்வாமியின் பெயர் பெரிய கொட்டை எழுத்துகளில் காணப்பட்டன. ஸ்வாமிகளின் வரலாறும் தரப்பட்டிருந்தது. லட்சக் கணக்கான பம்பாய் மாகாணவாசிகள் ஸ்ரீ தியாகராஜரைப் பற்றித் தெரிந்துகொள்ள ஏதுவாயிற்று.

மாதுங்கா மைதானத்தில் மேற்படி கைங்கரியக் கச்சேரிக்காக அமைக்கப் பட்டிருந்த விசேஷ பந்தலுக்குள்ளே, 28உ மாலை சுமார் நாலாயிரம் ரஸிகர்கள் அமர்ந்திருந்தார்கள். இவர்களில் பெண்மணிகள் ஆயிரத்தைந்நூறு பேருக்கு மேல் இருக்கலாம். குழ
தைகள் சகிதமாக வந்தவர்கள் பல
சபையில் எந்தப் பக்கத்திலிருந்தும் மேடை
யைப் பார்க்கும்படியாக அர்த்த சந்தி
வடிவத்தில் ஆசனங்கள் அமைக்கப் ப
டிருந்தன. பார்ப்பதற்கே ஆனந்த மளித்
அந்தப் பெரிய சபையில் அவ்வப்போது
ஏற்பட்ட கரகோஷத்தைத் தவிர மற்ற
படி பரிபூரண நிச்சப்தம் குடிகொண்டிரு
தது. அவ்வளவு நன்றாகச் சபையோ
சங்கீதத்தை அநுபவித்தார்கள்.

கச்சேரி நடந்து கொண்டிருந்தபோது
சுமார் ஒன்பது மணிக்குக் கச்சேரி
கமிட்டியின் காரியதரிசி என்னைப் பந்
தலுக்கு வெளியே வரும்படி அவசரமா
அழைத்தார். "என்னத்திற்காக இப்ப
அவசரமாகக் கூப்பிடுகிறீர்?" என்று கவ
யுடன் வெளியில் வந்தேன். பந்தலைச் சுற்
இருந்த திறந்த வெளியிலும் சாலை ஓர
களிலும் ஏராளமான ஜனங்கள் நின்
கொண்டும் உட்கார்ந்து கொண்டும் ஆனந்
மாகச் சங்கீதம் கேட்டுக் கொண்டிரு
தார்கள். "பாருங்கள்! எவ்வளவு ஜனங்க
அமைதியாக இருந்து சங்கீதம் கே
கிறார்கள்? பம்பாய் எப்படி?" என்
கேட்டார் காரியதரிசி.

"பிரமாதம்!" என்று ஒரே வார்த்தையி
சுருக்கமாகப் பதில் சொன்னேன்.

இந்த அபூர்வக் காட்சியைப் பார்த்
போதுதான் கர்நாடக சங்கீதம் இனிமே
பம்பாய் நகரையே தலைமை ஸ்தலமாக
கொள்ளக்கூடும் என்று தோன்றியது.

• • •

பம்பாய்ப் பிரதம மந்திரி ஸ்ரீ பா
கங்காதர கேர் அவர்கள் இந்தக் கச்சேரிக்
அக்கிராசனம் வகிப்பார் என்று அறி
போது நான் அவ்வளவாக உற்சாகப்ப
வில்லை. "புதிதாக மந்திரி சபை ஏற்ப
டிருக்கிறது. பிரதம மந்திரிக்கு எ
வளவோ வேலை நெருக்கடி இருக்கு
கச்சேரிக்கு நடுவில் வந்து ஐந்து நிமிஷ
தலையைக் காட்டி விட்டுப் போவா
இந்தச் சம்பிரதாய அக்கிராசனம் எ

ாக ?" என்று நினைத்தேன். ஆனால் ான் நினைத்ததற்கு மாருக, சரியாக மணிக்கு, கச்சேரிக்குச் சுருதி சேர்த்துக் காண்டிருக்கும்போதே பிரதம மந்திரி விஜ ம் செய்தார். அவருடன் உள்நாட்டு மந்திரி ஸ்ரீ மொரார்ஜி தேசாய் என்பவரும் வந்தார். ஆரவாரம் படாடோபம் ஒன்றுமில்லாமல் அமைதியாக வந்து இரண்டு மந்திரிகளும் ஆசனத்தில் உட்கார்ந்தார்கள்.

இரண்டு மணி நேரம் பாட்டுக் கச்சேரி டந்த பிறகு பேச்சுக் கச்சேரி தொடங் ற்று. கமிட்டியின் தலைவர் ஸ்ரீ மோடி ல்லாரையும் வரவேற்றுப் பேசியபிறகு, பிரதம மந்திரி கேர் பேச ஆரம்பித்தார். ந்து நிமிஷம் சம்பிரதாயமாக அவர் பேச ார் என்றுதான் கச்சேரிக் கமிட்டியார் ன்படச் சபையோர் எதிர்பார்த்தார்கள். ஆனால் எதிர்பார்த்ததற்கு மாருக அரை ணி நேரத்துக்கு மேல் அவர் பேசிக் கொண்டு போனர்! முதலில் ஹிந்தியில் விஸ்தாரமாகப் பேசி விட்டு, அப்புறம் சபை ில் கூடியிருந்த பெரும்பாலான தென்னிந் யர்களுக்காக ஆங்கிலத்திலும் பேசினர்.

இவ்விதம் பேச்சை நீட்டி விட்டதால், ங்கே கச்சேரியை அஞ்சல் செய்வதற்காக ந்திருந்த பம்பாய் ரேடியோக்காரர்களைத் வியாய்த் தவிக்கும்படி அடித்து விட்டார்!

8-30 லிருந்து 9-40 வரையில் பாட்டுக் ச்சேரியை அஞ்சல் செய்ய ரேடியோக் ாரர்கள் ஏற்பாடு செய்திருந்தார்கள். மணி -30 ஆகியும் பிரதம மந்திரி பேச்சை நிறுத் ாமல் பேசிக்கொண்டு போகவே ரேடி யோக்காரர்களின் பாடு தர்மசங்கடமாகி விட்டது. கச்சேரி நிர்வாகிகளிடம் அடிக் டி வந்து ஜாடை காட்டினர்கள். ஆனால் ச்சேரி நிர்வாகிகள் என்ன செய்ய முடி ம்? கர்நாடக சங்கீதம் பம்பாய்ப் பிரதம ந்திரி கேர் அவர்களை இவ்வளவு தூரம் வர்ந்து பரவசப் படுத்தி விடும் என்று அவர்கள் கண்டார்களா?

கடைசியாக, 8-45க்கு மறு படியும் பாட்டுக் கச்சேரி ஆரம் பித்த போது ரேடியோக் காரர்கள் ஒரு பெரிய பெரு மூச்சு விட்டு விட்டு அஞ்சல் செய்ய ஆரம்பித்தார்கள்.

*　*　*

**ப**ம்பாய்ப் பிரதம மந்திரி பால கங்காதர கேர் பார்ப்ப தற்குச் சாதாரண மனிதராகக் காணப்படுகிறார். ஆனால், பேச்சி லிருந்து மிகச் சிறந்த படிப்பாளி அவர் என்று தெரிய வந்தது. சங்கீதக் கலையின் சிறப்பைக் குறித்து விஸ்தாரமாக ஹிந்தியில் பேசிவிட்டு ஆங்கிலத்தில் பேச ஆரம்பித்ததும் காளிதாஸ மகாகவியின் சுலோகம் ஒன்றைச் சொன்னர். சுலோகத்துக்கு அர்த்தம் ஹிந்தியில் சொல்ல ஆரம்பித்ததும் சபை யோர் நகைத்தார்கள். மறுபடியும் இங்கிலீஷ் பேச்சை ஆரம்பித்தார். இந்தமாதிரி மூன்று, நாலு தடவை ஆங்கிலப் பேச்சின் நடுவே ஹிந்தி பேச ஆரம்பித்துச் சபையோரைச் சிரிக்கப் பண்ணினர். (தமிழ் நாட்டில் தமிழில் பேசிக்கொண்டே யிருக்கும்போது சிலர் மறந்து போய் இங்கிலீஷில் பேச ஆரம்பிப்பது எனக்கு நினைவு வந்தது.)

ஐந்து நிமிஷத்துக்குப் பதிலாக அரை மணி நேரத்துக்கு மேல் பம்பாய்ப் பிரதம மந்திரி கேர் பேசியதன் காரணம், அவர் ஸ்ரீமதி எம். எஸ். வின் கானத்தை அவ்வளவு தூரம் அநுபவித்துப் பரவசமாய்ப் போனதுதான் என்று அவர் எடுத்துச் சொன்ன சுலோகத்தி லிருந்து தெரிய வந்தது. குமார சம்பவத்திலுள்ள அந்த சுலோகத்தில் காளிதாஸ மகாகவி பார்வதி தேவியின் குரலைப் பற்றி வர்ணித்திருந்தார். "பார்வதி தேவியின் குரலைக் குயிலின் குரலுக்கு ஒப்பானது என்று கூறுவது, தேவியின் குரலினிமையை மிகவும் குறைத்துக் குயிலின் குரலுக்கு இல்லாத மகிமையைக் கொடுப்பதாகும்" என்பது சுலோகத்தின் கருத்து. "ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி தேவியைக் 'கான கோகிலம்' என்று சொல்வதும் அப்படித்தான். அதனால் கோகிலத்துக்கே அதிக பெருமை ஏற்படுகிறது!" என்று ஸ்ரீ கேர் கூறிவிட்டு, "இவருடைய இசையின் இனிமையும் வசீகர சக்தியும் எவ்வளவு என்பதற்கு வேறு அத்தாட்சியே வேண்டியதில்லை. இந்தப் பெரிய சபையில் இவ்வளவு நிச்சப்தம் நிலவி விருப்பதோடு, இங்கே மேடைக்கு அருகில் உட்கார்ந்திருக்கும் குழந்தைகள் கூடச் சத்தம் போடாமல் உட்கார்ந்திருப்பதே போதும்! ஒரு சபையில் குழந்தைகள் வந்து முன்னல் உட்கார்ந்து விட்டால் அவர்களால் எவ்வளவு அமைதிக் குறைவு ஏற்படும் என்பதைச் சாதாரணமாய்ப் பார்த்திருக்கிறேமல்லவா?" என்று கூறியபோது,



ஸ்ரீ சம்பக்லால் மோடி.

குழந்தைகள் உள்பட எல்லோருக்கும் ஒரே குதூகலமா யிருந்தது.

"இவ்வளவு இனிய குரலைச் சுப்புலக்ஷ்மி தேவி பொதுக் காரியங்களுக்கு நிதி திரட்டுவதற்காகப் பயன்படுத்தி வருவது" பற்றிப் பாராட்டிவிட்டு, இந்த உதவிக் கச்சேரிக்கு முகாந்திரமா யிருந்த பொதுக் காரியத்தைப் பற்றியும் பேசினார். ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமியைப் பற்றி அவர் அவ்வளவு நன்றாகத் தெரிந்துகொண்டிருந்தது பெரும் வியப்பை அளித்தது. மகாத்மா காந்தி இன்று எந்த ராம நாமத்தைப் பிரசாரம் செய்கிறாரோ, அந்த ராம நாமத்தையே ஸ்ரீ தியாகராஜர் தமது கீர்த்தனங்களின் மூலம் பிரசாரம் செய்தார் என்றும், தஞ்சாவூர் ராஜாவின் சன்மானத்தை வெறுத்து ராம நாமத்தைச் சொல்லி உஞ்ச விருத்தி செய்து ஜீவித்தார் என்றும், துகாராம், கபீர்தாஸ், மீராபாய், சைதன்யர் முதலிய பக்த கோஷ்டியில் சேர்க்கப்பட வேண்டியவர் ஸ்ரீ தியாகராஜர் என்றும், அப்படிப்பட்ட மகானின் ஞாபகத்தை நிலைநாட்டுவதற்காக எல்லாரும் சட்டைப் பையில் ஆழமாகக் கையை விட்டுப் பணம் கொடுக்க வேண்டும் என்றும் சொல்லி முடித்தார்.

* * *

மேற்கண்டவாறு பம்பாய்ப் பிரதம மந்திரியைப் பரவசப்படுத்திய சங்கீதக் கச்சேரியைப் பற்றி உள்ளபடி விரிவாக விமரிசனம் செய்வதா யிருந்தால் தொடர் கட்டுரையாக எழுதவேண்டி யிருக்கும். எனவே, சில முக்கிய அம்சங்களை மட்டும் இங்கே குறிப்பிட்டு முடிக்கிறேன்.

ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் "சாந் சனே" கீர்த்தனத்துடன் கச்சேரி வி விருப்புடன் ஆரம்பமாயிற்று.

பந்துவராளி ஆலாபனமும் 'அபா பக்தி' கீர்த்தனமும் சபையோரின் செ களையும் மனத்தையும் கவர்ந்தன. கிரம ஸ்வரப் பிரஸ்தாரங்களில் பாடலியும் பிடி வித்வானும் தென்னிந்திய ரஸிகர்களி கரகோஷத்தைப் பெற்றனர்.

அடுத்தபடி, எம். எஸ். ஸின் பிருந்தாவ கீதத்தைக் கேட்டுவிட்டு பம்பாய்க்காரர்க கரகோஷம் செய்தார்கள்.

பிறகு, சங்கராபரண ராக ஆலாபண வந்தது. அதன் இடையிடையே எம். எ ஸுக்கும் சௌடய்யாவுக்குமாக மாற் மாற்றிப் பல தடவை சபையில் கரகோஷ உண்டாயிற்று. இதில் வட இந்தியர்க தென்னிந்தியர்கள் எல்லாரும் சமமாக கலந்து கொண்டார்கள்.

ஆயிரந்தடவைக்கு மேல் ஏற்கெனவே நான் கேட்டிருக்கும் சங்கராபரண ராக தில் இதுவரையில் அறியாத அழகுகளு அற்புத சஞ்சாரங்களும், விதவிதமா கற்பனை வடிவங்களும் அன்று ஜொலித்தன

மதிப்புயர்ந்த வைரத்தை மின்சார தீப தின் ஒளியில காட்டினால் அதிலிருந் எப்படி சலசலமான வர்ண ஒளி மின்னல்க தோன்றி டால் வீசிப் பிரகாசிக்குமோ அப்படி அன்று சங்கராபரண ராகம் வர்ண ஜாலங்களுடன் பிரகாசித்தது.

இதிலிருந்து ஸ்தாபிதமாவது கர்நாட சங்கீதத்தின் மேன்மையா அல்லது பம்பா



பம்பாய்ப் பிரதம மந்திரி, ஸ்ரீ பி. ஜி. கேர் பேசுகிறார்.



ம்பாய்த் தென்னிந்தியப் பள்ளிக்கூடத்திற்குச் சென்ற வருஷம் ஸ்ரீமதி எம். எஸ். உதவிக் ச்சேரி அளித்ததை முன்னிட்டு மேற்படி பள்ளிக்கூடக் கமிட்டியார் பரிசாக அளித்த ஜீ கஸ்தூரிபாய படத்தைப் பம்பாய் பிரதம மந்திரியிடம் எம். எஸ். பெற்றுக் கொள்கிறார்.

---

ன்ன தம்பூர்களின் ரஸிகத் தன்மை ிசேஷமா அல்லது ஸ்ரீ தியாகப் பிரம்மத் ின் பக்தி மகிமைதானா என்பதை இன்னும் ான் நிர்யாணிக்க வில்லை.

“யாரோ என்று எண்ணாமலே” என்னும் ருணாசலக் கவியின் கீர்த்தனத்தில் ஸ்வரப் ரஸ்தாரம் வந்தபோது கச்சேரி உன்னத லையை அடைந்தது போலவே சபை யாரின் உற்சாகமும் சிகரத்தை எட் ற்று. வடநாட்டின் பிரசித்த சங்கீத த்வானுகிய சங்கீத சம்ராட் பண்டித க்கார நாத் எனக்குப் பின்னால் உட்கார்ந் ிருந்தார். அதுவரையில் உட்கார்ந்த டியே அடிக்கடி “சபாஷ்” சொல்லி ஆனந் ப்பட்டுக் கொண்டிருந்தவர், பாடகியும் மல் வித்வானும் ஸ்வர ஆவர்த்தனம் றைத்துக் கொண்டு வந்தபோது நாற் ாலியிலிருந்து எழுந்து நின்று “சபாஷ்” சால்ல ஆரம்பித்து விட்டார்!

கச்சேரியின் பிற்பகுதியில் காகாப்ரியா ாகமும் “மாயே” கீர்த்தனமும் சிறந்து ிளங்கின.

தோடி ஆலாபனமும் தானமும் அந்தப் பரிய சபையிலிருந்த ரஸிகர்களை மீண்டும் மய்மறக்கச் செய்தன. தானத்தின் முடி ில் ஸ்ரீ செளடய்யா தமக்கே தனி ரிமையான சப்த ஜால சித்திரங்களைப் பாழிந்த போது சபையில் வர்ணிக்க டியாத ஆரவாரம் எழுந்தது.

பல்லவி முடிந்தபோது மணி பத்தரை ஆகிவிட்டது. ஆயினும் வடக்கத்தியார் உள் படச் சபையிலே யாரும் எழுந்திருக்கும் வழியாக இல்லை. “காற்றினிலே வரும் கீத”த்தைக் கேட்டு விட்டுத்தான் போவோம் என்று சபையிலே சிலர் பிடிவாதமாகச் சொன்னார்கள்! அந்தப் பாட்டையும் “ஆடுவோமே” முதலிய இரண்டொரு இதர உருப்படிகளையும் பாடிய பிறகு 10-45 க்கு மங்களம் பாடிக் கச்சேரி இனிது முடிந்தது.

இந்தக் கச்சேரிக்கு இவ்வளவு சிறப்பான ஏற்பாடுகளைச் செய்து நடத்தி வைத்த பம்பாய் ரஸிகர்கள், “பம்பாயில் எம். எஸ். கச்சேரி எப்போதுமே நன்றாயமைவது வழக்கம். ஆனால் இந்தக் கச்சேரி எல்லா வற்றையும் தூக்கி அடித்து விட்டது!” என்று குதூகலப்பட்டார்கள்.

* * *

மேற்படி கச்சேரியில் மைசூர் சமஸ் தான வித்வான் சங்கீத ரத்ன செளடய்யா அவர்கள் வயலின் வாசித்தது கர்நாடக சங்கீத உலகில் ஒரு முக்கிய சம்பவம் என் பதைத் தென்னிந்தியாவிலுள்ள ரஸிகர் களுக்குச் சொல்ல வேண்டியதில்லை. ஸ்ரீ சம்பக்லால் மோடி பேசும்போது மேற்படி சம்பவத்தைக் குறிப்பிட்டு, “இன்று பம்பாயில் சரித்திரம் சிருஷ்டிக் கப்படுகிறது!” என்று சொன்னார். கர்நாடக

சங்கீதத்தின் சரித்திரத்தில் இதுவரையில் நடவாத ஒரு பெரிய சம்பவம் அன்று பம்பாயில் நடைபெறுகிறது என்பதை மேலும் விளக்கிக் கூறினார். "இது வரை தென்னிந்தியாவில் ஸ்திரீ பாடகிகள் எவ்வளவு விசேஷ வித்தைத் திறமை உடையவர்களா யிருந்தாலும் அவர்களுக்குப் பிரபல ஆண் பக்க வாத்தியக்காரர்கள் வாசிப்பதில்லை என்று ஒரு அர்த்தமற்ற சம்பிரதாயம் இருந்து வந்ததாம். இந்தியாவிலேயே தலை சிறந்த பிடில் வித்வானாகிய மைசூர் ஆஸ்தான வித்வான் ஸ்ரீ சௌடய்யா மேற்படி மூட சம்பிரதாயத்தை இந்த மேடையில் தகர்த்து எறிந்து விட்டார்!" என்று ஸ்ரீ மோடி கூறியதைச் சபையில் கூடி யிருந்த தென்னிந்திய ரஸிகர்கள் அவ்வளவு பேரும் ஆமோதித்துக் கரகோஷம் செய்தார்கள்.

சங்கீத உலகில் ஸ்ரீ சௌடய்யா ஒரு பெரிய தீரர். தமது சுய கௌரவத்தையும் தமது சங்கீத வித்தையின் கௌரவத்தையும் நிலை நாட்டி வருகிறவர். வயலினுக்கு ஏழு தந்தி போடும் விஷயத்தில் அவர் மியூஸிக் அகாடமியுடன் போராடித் தம் கட்சியை நிலைநாட்டி வெற்றி பெற்றதை அனைவரும் அறிவார்கள். மேலே குறிப்பிடப்பட்ட அர்த்தமற்ற சம்பிரதாயத்தை உடைத் தெறிவதிலும் ஸ்ரீ சௌடய்யா முதன்மையாக நின்று வழி காட்டியது பொருத்தமானதே யாகும்.

அன்று ஸ்ரீ சௌடய்யாவின் வாசிப்பு எப்படி யிருந்தது என்று சொல்வது கடினமான காரியம். பாட்டின் மேன்மைக்கும், சபையின் ரஸிகத் தன்மைக்கும், ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமியின் கைங்கரியத்துக்கும் உகந்ததா யிருந்தது என்றுதான் ஒருவாறு சொல்லக்கூடும். சாதாரணமாகவே அவருடைய ஏழு தந்தி வயலினில் நாதம் கம்பீரமாய்ப் பொழியும். அன்று நாலரைக் கட்டை சுருதியில் வாசித்தபோது தந்தியில் வில்லை வைக்க வேண்டியதுதான், உடனே நாத வெள்ளம் பொங்கிப் பெருக ஆரம்பித்தது. தனி ஆவர்த்தனங்களில் ஸ்ரீ சௌடய்யா கண்களை மூடிக்கொண்டு தம்மையும் சுற்றுப்புறத்தையும் மறந்து தந்தியும் வில்லும் தாமும் நாதமுமாக கலந்து ஐக்யமாகி விட்டால் அப்புறம் கேட்க வேண்டியதில்லை. ரஸிகர்கள் தங்களையும் வெளி உலகையும் மறந்து நாதப் பிரபஞ்சத்துக்கே சென்று விடுவார்கள். அந்த நாதப் பிரபஞ்சத்தில் சில சமயம் இனிய இளந் தென்றலையும் சில சமயம் ஆழும் சண்டமாருதத்தையும் அனுபவிப்பார்கள். சில சமயம் அவர்களின்மீது மென்மையான மலர் மாரி பொழியும்; சில சமயம் வானத்து நட்சத்திரங்கள் பொல பொல வென்று உதிரும்!

* * *

மேற்படி கைங்கரியக் கச்சேரிக்கு கல்பாத்தி ராமநாதன் மிருதங்கமும் ஆலங்குடி ராமச்சந்திரன் கடமும் வாசித்து புண்ணியம் கட்டிக் கொண்டார்கள். அந்த கைய சந்தர்ப்பத்தில் அப்பேர்ப்பட்ட சபையில் இருவரும் தங்கள் கைவரிசைகளை நன்கு காட்ட வேண்டுமென்று முனைந் திருந்ததில் வியப்பு ஒன்றும் இல்லை. கல்பாத்தி ராமநாதன் வாசிப்பில் சில சமயம் அவருடைய குருவான பாலக்காட்டு மணி ஐயரின் கைவரிசைகளைக் காண்கிறோம். இந்தக் கச்சேரியில் ஒரு சமயம் அவர் ஸ்ரீ சௌடய்யாவுடன் பிரமாதமான போட்டி போட்டுச் சமாளித்தது சபையோருக்கு எல்லையற்ற உற்சாகத்தை அளித்து ஆரவாரத்தை உண்டு பண்ணிற்று



# ராமுவும் சீனுவும்

ராஜி

சீதாராம அய்யர் ரொம்ப பணக்காரர். அவருக்கு ராமு, சீனு என்று இரண்டு பிள்ளைகள் இருந்தார்கள். அவர்கள் இருவரும் ஏதேனும் விஷமம் செய்து கொண்டேதான் இருப்பார்கள். சீதாராம அய்யருக்குத் தம் பிள்ளைகள் வீட்டு வேலையும் செய்ய வேண்டும் என்ற எண்ணம் எப்பொழுதும் உண்டு. பிள்ளைகளுக்கு வீட்டு வேலை செய்வதென்றால் விளக்கெண்ணெய் சாப்பிடுகிறமாதிரியிருந்தது.

சீதாராம அய்யரின் வீடு மிகப் பெரியது; ஒரு பெரிய தோட்டமும் இருந்தது. தோட்டத்தில் உள்ள மரங்களிலிருந்து இலைச் சருகுகள் வீட்டிலுள்ள முற்றம் முழுவதும் ஏராளமாக விழுந்து குவிந்தன. சீதாராமய்யர் தம் பிள்ளைகளைக் கூப்பிட்டு அந்த இலைகளை எல்லாம் பொறுக்கித் தோட்டத்தில் கொண்டு போய் எறியச் சொன்னார். அப்பொழுதுதான் ராமுவும் சீனுவும் விளையாடக் கிளம்பினார்கள். அந்தச் சமயத்தில் வேலையிட்டது அவர்களுக்குப் பிடிக்கவே இல்லை. ராமுவுக்குத் திடீரென்று ஒரு யோசனை தோன்றியது. அவர்களுடைய வீட்டு முற்றத்து மூலையில் ஜலம் விழுவதற்காக வைத்திருந்த பீப்பாயின் மீது அவன் கவனம் சென்றது. உடனே ராமு சீனுவைக் கூப்பிட்டு முற்றத்தில் விழுந்திருந்த எல்லா இலைச் சருகுகளையும் பொறுக்கினான். அவைகளை அந்தப் பீப்பாயில் போட்டு ஒருவருக்கும் தெரியாமல் காரியத்தை முடித்து விட்டார்கள்.



ராமுவும் சீனுவும் தாங்கள் இலைகளை எல்லாம் பொறுக்கித் தோட்டத்தில் கொண்டுபோய்ப் போட்டுவிட்டதாகத் தகப்பனாரிடம் சொன்னார்கள். தகப்பனாரும் மிகவும் சந்தோஷப்பட்டார்.

மறுநாள் திடீரென்று பெரிய மழை பிடித்துக் கொண்டது. முற்றத்தில் இருந்த பீப்பாயில் ஜலம் நிரம்பிய பொழுதுதான் சீதாராமய்யருக்கு விஷயம் புரிந்தது. ராமுவும் சீனுவும் பீப்பாயில் அடைத்து வைத்திருந்த இலைகள் எல்லாம் வெளியே வந்தன. ராமுவும் சீனுவும் வெட்கித் தலை குனிந்தார்கள். தாங்கள் இருவரும் சோம்பலுடன் செய்த காரியத்திற்கு அப்பாவிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டனர். அன்றையதினத்திலிருந்து ராமுவும் சீனுவும் சோம்பலை விட்டுத் தகப்பனார் சொன்னபடி நடந்து கொண்டார்கள்.





# காலக்ஷேபம்

## நிராயுதபாணி

"இன்று மாலை எங்கள் சங்கத்தில் விவாதப் போர் நடத்தப் போகிறோம். அவரவருக்கு அவரவர் மூளைதான் ஆயுதம்!"

"அட பாவி, நிராயுதபாணியாகச் சென்று எதிர்க்கிறாயேடா!" —வி. சீனிவாசன்.

★

## ஓஹோ!

நீதிபதி:—நீ வாதியோடு சண்டை போட்டது உண்மைதானா?

குற்றவாளி:—ஆமாம்.

நீதிபதி:—நாற்காலியை எடுத்து அவன்மீது ஏன் வீசினாய்?

குற்றவாளி:—என்னால் மேஜையைத் தூக்கி எறிய முடியவில்லையே!—ஆர். பூரணானந்தன்.

★

## நல்ல பதில்!

ஒருவர்:—என்ன, பத்தரே! நகை செய்யக் கொடுத்து ஒரு மாதத்திற்குமேல் ஆகிறதே! 'அது ஒரு நாள் வேலை' என்று அப்போது சொன்னீரே?

பத்தர்:—ஆமாம், சொன்னேன். ஆனால், வேலையை எப்போது ஆரம்பிக்கப்போகிறேன் என்று உங்களிடம் ஏதாவது சொன்னேனா?

—ஜெயபாலகிருஷ்ணன்.

★

## குற்றமில்லை

போலீஸ்காரன்:—ஏன்டா, என்னடா திருடினாய்? இப்படி உதைபட்டுச் சாகிறாயே?

திருடன்:—ஒன்றுமில்லீங்க: நேற்று இரவில் அந்தக் கோடி வீட்டில் ஒரு சின்னக் கயிறுதான் எடுத்துக்கிட்டு வந்தேனுங்க.

போலீஸ்காரன்:—போடா, மட்டி! அதற்கா இவ்வளவு அடி?

திருடன்:—இல்லீங்க: கயிறு கொண்டுவரும்போது அதன் முனையிலே ஒரு மாடு கட்டியிருந்திச்சுங்க! —என். வேணு.

★

## தெரியும்!

வைத்தி:—ஏன்டா, பாச்சு! நம்ம குப்புசாமி ஏதோ அடிபட்டு ஆஸ்பத்திரியில் இருக்கானாமே! உனக்கு அவனைப் பற்றி ஏதாவது தெரியுமா?

பாச்சு:—தெரியும். ரொம்ப நாளாக என் வீட்டு மனையின் வாங்கப் போவதாகச் சொல்லிக் கொண்டிருந்தான் —பி.என்.கே. சுவாமி.

## என்ன அவசரம்?

தையற்காரன்:—ஸார்! இன்னும் சட்டை தைத்த கூலி பாக்கி கொடுக்கவில்லையே!

வாடிக்கைக்காரன்:—சட்டைத் துணிக்கே இன்னும் பாக்கி கொடுக்கவில்லை; அதற்குள் உனக்கு என்ன அவசரம்?

—வி. என். நாராயணன்.

★

## படிக்குப் பாதி!

பழைய புத்தகக் கடை ஒன்றில் ஒருவர் "லட்சாதிபதி ஆவது எப்படி?" என்ற புஸ்தகத்தைப் பொறுக்கி எடுத்தார். கடைக்காரரிடம் அதைக் காண்பித்து, "என்ன ஐயா! பாதி புஸ்தகம் ஜீரணமாகி விட்டதுபோலிருக்கிறதே!" என்றார்.

"ஆனால் என்ன? இருக்கிற பக்கத்துக்கு ஐம்பதினாயிரம் ரூபாய் வரட்டுமே! கசக்கிறதா?" என்றார் கடைக்காரர்.

—எஸ். மோகன்ராம்.

★

## விலக்காத காரணம்?

வக்கீல்:—வாதியும், பிரதிவாதியும் சண்டை போட்டுக் கொண்டிருக்கும்போது நீ ஏன் அவர்கள் சண்டையை விலக்கக் கூடாது?

சாட்சி:—சாமி! அப்போது எனக்கு யார் வாதி, யார் பிரதிவாதின்னு தெரியலீங்க!

—வி. ஆர். வி.

★

## புகழ் எப்படி?

நண்பன்:—சித்திரப் படக் காட்சிக்குச் சென்றிருந்தேன். அதில் உன் படம் ஒன்றுதான் பார்க்கும்படியாக இருந்தது.

சித்திரக்காரன்:—ரொம்ப சந்தோஷம்; ரொம்ப நன்றாயிருந்ததோ?

நண்பன்:— இல்லை. மற்றப் படங்களைச் சுற்றி ஜனங்கள் கூட்டமாக நின்று கொண்டிருந்தார்கள்! —எம். எஸ். துரைசாமி.

★

## சரித்திரத்தில் பதில்

சரித்திர ஆசிரியர்:—அடே ராகு, நீ எப்பொழுதிலிருந்து பள்ளிக்கூடம் வரவில்லையென்பது தெரியுமா, உனக்கு?



ராகு:—கஜினி முகம்மது இந்தியா மீது படையெடுத்தபோது வந்தேன் ஸார்! அப்புறம் இன்றுதான் வருகிறேன்.

—வே. ஜானகி.

# லேடி லீலாவதி ராமநாதன்




இந்தப் பூவுலகத்தை விட்டுச் செல்லும் போது தங்களுடைய புகழுடம்பை நிலைநாட்டி விட்டுச் செல்லும் பாக்கியத்தைச் சிலரே அடைகிறார்கள். அத்தகைய பாக்கியவான்களில் இலங்கை யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த ஸர் பொன்னம்பலம் ராமநாதன் ஒருவர். சிறந்த கல்விமானும், உயர்ந்த குணசாலியும், சிவநேசத் திருவாளரும், தமிழர் பண்பாட்டின் தலைசிறந்த உதாரண புருஷருமான அப்பெரியார் தமது வாழ்நாளில் செய்த அரும் தொண்டுகளின் ஞாபகார்த்தமாகப் பல தர்ம ஸ்தாபனங்களையும் கல்வி ஸ்தாபனங்களையும் ஏற்படுத்தி விட்டுச் சென்றார். அதோடு, தமக்குப் பின்னால் அந்த ஸ்தாபனங்களை நல்ல முறையில் நிர்வகிப்பதற்குச் சகல விதங்களிலும் தகுதி வாய்ந்த ஒருவரையும் ஏற்படுத்தி விட்டுச் சென்றார். அத்தகைய அவருடைய அருமை மனைவியார் லேடி லீலாவதி ராமநாதன் அவர்கள் நமது இந்த இதழ் அட்டையை அலங்கரிக்கிறார்கள்.

ஆஸ்திரேலியா தேசத்தில் பிறந்த இந்த ஆங்கில மாதரசி தமது இளம் பிராயத்தில் பாரமார்த்திக வாழ்க்கையில் பற்றுக் கொண்டு உண்மைச் சமயத்தை அறிய வேண்டி உலக யாத்திரை தொடங்கினார். அவர் இலங்கைத் தீவை அடைந்தபோது கொழும்பு நகரில் அச்சமயம் ஸொலிஸிடர் ஜெனரல் பதவி வகித்த ஸ்ரீ பொன்னம்பலம் ராமநாதன் அவர்களின் சைவ சமய உபந்யாசங்களைக் கேட்டு அவரைத் தமது பரம குருவாகக் கொண்டார். சில காலம் சிஷ்யையாக இருந்து தொண்டு செய்த பிறகு, அவரையே தமது பதியாக வரித்து மணந்து கொண்டார். அன்று முதல் சைவ சமயத்தையே தமது சமயமாகவும் பாரத நாட்டையே தாய்நாடாகவும் கொண்டு மனப் பண்பிலும் நடை உடை பாவனைகளிலும் முழுதும் ஹிந்து பெண்மணியாக மாறினார். பழைய பாரதநாட்டுச் சீதை, சாவித்திரி, தமயந்தி முதலிய கற்பரசிகளோடு சேர்க்கப்படுமாறு கணவனே தெய்வமெனக் கொண்டு வாழ்க்கை நடத்தினார். ஸர் பொன்னம்பலம் ராமநாதன் காலமான பிறகு அவர் ஆரம்பித்து வைத்த தர்ம கைங்கரியங்களைக் கண்ணும் கருத்துமாக இன்று வரை பராமரித்து வருகிறார்.

யாழ்ப்பாணத்தில் ஸர் பொன்னம்பலம் ராமநாதன் அவர்கள் ஆரம்பித்து வைத்த ஸ்தாபனங்களில் மிகப் பிரதானமானவை: "ராமநாதன் கலாசாலை"யும் "பரமேச்வரக் கலாசாலை"யுமாகும். ராமநாதன் கலாசாலை பெண்களுக்காகவும், பரமேச்வர கலாசாலை ஆண் பிள்ளைகளுக்காகவும் ஏற்பட்டு நடந்து வருகின்றன. இக் கலாசாலைகளில் ஆங்கிலக் கல்வி போதிக்கப்படுவதோடு, ஹிந்து சமயம், ஹிந்துக்களின் பண்பாடு, இந்தியா தேசம் ஆகியவற்றினிடம் பக்தி வளருமாறு மாணாக்கர்களும் மாணவிகளும் பயிற்சியளிக்கப்படுகிறார்கள். மேற்படி ஸ்தாபனங்களை இன்றளவும் லேடி ராமநாதன் அவர்கள் சிறப்பாக நிர்வகித்து வருகிறார்கள். பதி பக்தி காரணமாக லேடி லீலாவதி ராமநாதன் எவ்வளவு தூரம் ஹிந்து தர்மத்தில் ஈடுபட்டு ஐக்யமாகியிருக்கிறார் என்



ராமநாதன் கலாசாலை



ராமநாதேஸ்வர ஆலயம்

அதை ஓர் உதாரணத்தின் மூலமாக நாம் நன்கு அறியலாம்.

திருவாசகப் பாடல்களைத் தூய தமிழ் உச்சரிப்புடன் அவர் மனமுருகிப் பாடும்போது அவருடைய நயனங்களிருந்து கண்ணீர் அருவியாகப் பெருகுவது வழக்கமாம்.

ஸ்ரீமதி லீலாவதி அம்மையார் பல நூல்களுக்கு ஆசிரியை ஆவர். ஸர் பொன்னம்பலம் ராமநாதன் அமெரிக்காவில் நிகழ்த்திய உபந்யாசங்களைத் திரட்டி அவர் வெளியிட்டுள்ள "Western Pictures for Eastern Students" என்ற நூல் பிரசித்தி பெற்றது. இராமாயணக் கதையை இளம் மாணுக்கர்களுக்காக எளிய ஆங்கில நடையில் இயற்றி உதவியிருக்கிறார்.

ஸ்ரீமதி லீலாவதி அவர்களின் பதிபக்திக்குச் சிறந்த சான்றுகளாக இலங்கையிலும் இந்தியாவிலும் இரண்டு கோயில்கள் விளங்குகின்றன. ராமநாதன் கலாசாலையில் ஸர் பொன்னம்பலம் ராமநாதன் அவர்களுடைய சமாதியின் மேல் அவர் எழுப்பியுள்ள ராமநாதேஸ்வர ஆலயத்தில் இரவும் பகலும் இடைவிடாமல் மங்கா விளக்குப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது.

ஸர் பொன்னம்பலம் ராமநாதன் ஜீவியவந்தரா யிருந்தபோது அடிக்கடி கோடைக்கானல் மலைக்கு வருவதுண்டு. அந்த மலைமேல் ஒரு மரத்தடியில் அமர்ந்து ஸ்ரீ ராமநாதன் இறைவனைத் தியானம் செய்வது வழக்கமாம். அந்தப் புனிதமான இடத்தில் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோயில் ஒன்றை லேடி ராமநாதன் கட்டியிருக்கிறார். பன்னிரண்டு வருஷத்துக்கு ஒரு தடவை புஷ்பிக்கும் குறிஞ்சிப் பூக்கள் பூத்திருந்த காலத்தில் மேற்படி ஆலயத் திருப்பணி ஆரம்பிக்கப்பட்டபடியால், இந்த ஆலயத்துக்குக் குறிஞ்சி ஆண்டவர் கோயில் என்று பெயர் வழங்கி வருகிறது.

லேடி லீலாவதி ராமநாதன் கல்வித் துறையில் செய்து வரும் அரும் பெரும் தொண்டுகளை மதித்து 1942-ம் ஆண்டில் இலங்கைச் சர்வ கலாசாலையில் நடந்த பட்டமளிப்பு விழாவில் அந்த மூதாட்டிக்கு டாக்டர் பட்டம் அளிக்கப்



ஸ்ரீ பொன்னம்பலம் ராமநாதன்

பட்டது. முதன் முதலாக இலங்கைச் சர்வ கலாசாலையாரிடம் இத்தகைய கௌரவத்தைப் பெற்ற பெண்மணி லேடி ராமநாதன் அவர்களே யாதலால், இது காரணமாக யாழ்ப்பாணத்துத் தமிழ் மக்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே யில்லை. அவர்கள் லேடி ராமநாதனுக்கு அச்சமயம் நடத்திய உபசாரங்கள் யாழ்ப்பாணத்தின் சரித்திரத்தில் இடம் பெறவேண்டியவை யாகும்.

ஸர் பி. ராமநாதன் அவர்களால் ஆரம்பிக்கப்பட்டு அவருடைய தர்மபத்தினியால் இன்று சிறப்பாக நிர்வகிக்கப்பட்டுவரும் இரண்டு கல்வி ஸ்தாபனங்களில் ராமநாதன் கலாசாலையின் வெள்ளி விழா சென்ற 1939-ம் வருஷம் சிறப்பாக நடைபெற்றது. பரமேச்வராக் கலாசாலையின் வெள்ளி விழா நாளது மே மாதம் 14உ இலங்கைக் கவர்னர் அவர்களால் ஆரம்பித்து வைக்கப்பட்டுக் கோலாகலமாக நடைபெறு மென்று அறிகிறோம்.

மேற்படி வெள்ளி விழா வைபவத்தை யொட்டி நமது மனமார்ந்த வாழ்த்துக்களை லேடி லீலாவதி ராமநாதன் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறோம். லேடி ராமநாதனின் அரிய தொண்டுகளுக்கு எல்லா வகையிலும் உதவி புரிந்து வரும் அவருடைய புதல்வி ஸ்ரீமதி சிவகாமசுந்தரியையும் மருமகர் ஸ்ரீ எஸ். நடேசன் அவர்களையும் மகிழ்ச்சியுடன் பாராட்டுகிறோம்.

யாழ்ப்பாணத்தில் சிறந்த முறையில் தமிழ்ச் சர்வகலாசாலை ஒன்றை நிறுவ வேண்டும் என்னும் அவர்களுடைய மனோரதம் இனிது நிறைவேறவேண்டும் என்று இறைவனைப் பிரார்த்திக்கிறோம்.




ஒரு துரும்பைக் கிள்ளிக் கீழே போட்டு "நீதான் மாப்பிள்ளை!" என்று சொல்லிவிட்டால் அது விறைக்குமென்றும் குதிக்குமென்றும் சொல்லுகிறார்கள். இதை நான் அநுபவ ரீதியாகப் பார்க்க வேண்டும் என்று நினைத்து ஒரு துரும்பைக் கிள்ளிக் கீழே போட்டு விட்டு, அதைப்பார்த்து, "நீ மாப்பிள்ளை!" என்று சொல்லிப் பார்த்தேன். அது விறைக்கவுமில்லை; குதிக்கவுமில்லை. துரும்புக்குப் பதிலாக ஒரு சிறு தடியைக்கூட எடுத்துப் போட்டுப் பார்த்தேன். ஊஹூம்; அதுவும் விறைக்கவில்லை. கடைசியாக, ஒரு பெரிய குண்டாந்தடியாகப் பார்த்து எடுத்துப் போட்டேன். அதாவது குதிக்க வேண்டுமே? — கிடையாது!

நிஜ மாப்பிள்ளைகளையே தரிசனம் செய்து அவர்கள் விறைப்பதையும் குதிப்பதையும் காணலாம் என்று இரண்டொரு கலியாணங்களுக்கும் சென்று பார்த்தேன். அங்கேயும் மாப்பிள்ளைகள் குதிப்பதையும், விறைப்பதையும் காணவில்லை. புகைச்சலில் கண்ணைக் கசக்கிக் கொண்டு புதிய ஆடைகளின் பளுவைத் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு கலியாணப் பந்தலில் நின்று கொண்டிருக்கும்போது அவர்களைப் பார்த்தால் பரிதாபப்படுவதற்குரிய ஆசாமிகளாய்த் தென்பட்டார்களே யொழிய விறைப்பவர்களாய்க் காணோம்.

இந்தக் கூற்றுக்கு யார் மூல காரணம் என்பதை ஆராயும்போது, பெண்ணைப் பெற்றவர்கள்தான் என்று நன்றாய் விளங்கியது. இதைச் சற்று ஆழ்ந்து கவனிப்போமானால், இதில் மாமனார்களின் சூழ்ச்சி பழைய நாஜி முறையைத் தழுவியதாக இருப்பதைக் காணலாம்.



நாஜிகள் ஒரு தேசத்தைக் கைப்பற்றுமுன், அந்தத் தேசத்தின்மீது பல விதமான குற்றங்களைச் சாட்டி, பத்திரிகை மூலமாக விளம்பரப் படுத்தி, அத்தேசத்தைப் பயமுறச் செய்து, அதைத் தங்கள் வழிக்குக் கொண்டு வரப் பார்ப்பார்கள். அது போலவே இந்த மாமனார்களும் "நமது மாப்பிள்ளை ரொம்பவும் விறைக்கிறார். மாப்பிள்ளைக்கு முறுக்கு அதிகம்!" என்று விளம்பரப்படுத்தி அதன் மூலமாகத் தம் மாப்பிள்ளைகளைத் தமது வழிக்குக் கொண்டு வரப் பார்க்கிறார்கள். ஆகவே மாப்பிள்ளைகள் இது விஷயத்தில் சிறிது ஜாக்கிரதையாக இருக்க வேண்டியது அவசியம். இதற்கெல்லாம் ஒரு சிறிதும் பயப்படக்கூடாது என்று எச்சரிக்கிறேன்.

"மாப்பிள்ளைகளுக்கு உண்மையாகவே முறுக்கும், விறைப்பும் இருக்கிறதா?" என்று யாராவது என்னைக் கேட்டால் அவர்களை நோக்கி, "ஏன் இருக்கக் கூடாது?" என்று திருப்பிக் கேட்பேன். ஒருவருடைய பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டால் அந்தப் பெண்ணிடம் தான் அந்த மாப்பிள்ளையின் ஜம்பம் பலிப்பதில்லை; விறைப்பும் செல்லுவதில்லை. அந்த விறைப்பையும், முறுக்கையும் தனது சகதர்மிணியின் தகப்பனார் மீது காட்டுவதில் என்ன தவறு? இவருடைய பெண்ணைக் கலியாணம் செய்து கொண்டால் அவளிடம் தான் தாசானுதாசனாக இருக்க வேண்டியிருக்கிறது. இவரிடம் கூடவா அப்படியிருக்க வேண்டும்? மாப்பிள்ளைகள் என்ன, சுயமரியாதை யற்றவர்களா?

விறைப்பாக இருப்பதனால் மாப்பிள்ளைகளுக்கு அநேக நன்மைகள் உண்டாகின்றன. மாமனார் வீட்டுக்குப் போனால் இங்கிதம் தெரியாமல் அசந்தர்ப்ப வேளைகளில் மாமனாரோ அல்லது அந்த 'வாண்டுப் பயல்' மைத்துனனோ வந்து அனாவசியமாகத் தொந்தரவு செய்ய மாட்டார்கள். யாராவது வந்துவிடப் போகிறார்களே என்ற பயமின்றி உல்லாசமாகத் தமது மனைவியுடன் எவ்வளவு நேரமானாலும் பேசிக் கொண்டிருக்கலாம்.

இரண்டாவது, மாப்பிள்ளைகளுக்கு அவர்களது விறைப்பின் வேகத்திற்குத் தகுந்தவாறு மாமனார்களது சன்மானம் கிடைக்கும். மாப்பிள்ளைக்கும், பெண்ணுக்கும் சற்றுத் தாராளமாகவே சீர் செனத்தி செய்தாலாவது அவரது

# அம்பியும் அணிலும்









அம்பிப் பயல் விளையாட்டாக அணிலைப் பிடித்துத் தன் மேஜைக்குள் அடைத்து வைக்க, கடைசியில் அது வினையாக முடிகிறது.

---

றைப்பு குறையுமோ என்று எண்ணி
ாமனார் தமது தாராள மனப்பான்
மையை இது விஷயத்தில் காட்டுவார்.
உதாரணமாக, தலை தீபாவளிக்கு
ாமனார் வீட்டிற்குச் சென்றிருக்கும்
ாப்பிள்ளைக்கு வைர மோதிரம் செய்து
பாட மாமனார் உத்தேசித்திருக்கிறார்
ன்று வைத்துக் கொள்வோம். அந்த
ாப்பிள்ளை தமது மாமனாரோடு சற்று
கம் கொடுத்து, தாராளமாகப் பேசு
பராக இருந்தால் அவருக்கு வெறும்
ங்க மோதிரமே கிடைக்கும். ஆனால்
ாப்பிள்ளை மாமனாருடன் சரியாகப் பேசு
பராக இல்லாமல், அவர் கேட்ட கேள்வி
ளுக்கு மட்டும் ஒன்று அல்லது இரண்டு
ார்த்தைகளில் பதில் சொல்லிவிட்டு,
ம்' என்று முகத்தை வைத்துக் கொண்
ருப்பாரானால் அவருக்கு நிச்சயமாக
வர மோதிரம் கிடைக்கும். இதைவிட
நபடி மேலாக, மாமனார் கேட்பதற்கு
ாயைத் திறந்து பதில் பேசாமல் தலையை
த்திரம் அசைத்து விட்டு 'ஜபர்தஸ்
க' இருந்தோமானால் வைர மோதிரத்

துடன் 'ரேடியோ ஸெட்' ஒன்று கிடைப்பதற்கும் 'சான்ஸ்' இருக்கிறது. (ஐயா, மாமனாரே! நான் உங்கள் வீட்டிற்கு வரும்போது, உங்களுடன் 'வளவள' வென்று பேசுகிறேனே என்று கம்பா இருந்துவிட வேண்டாம். அதற்காகத் தங்கள் போடும் வைர மோதிரத்தையோ, கொடுக்கப் போகும் ரேடியோ ஸெட்டையோ நிறுத்திவிட வேண்டாம். என்னால் பேசாமல் 'உம்'மென்று இருக்க முடியாது. அது என் சுபாவம்!)

"மாப்பிள்ளை முறுக்கு", "மாப்பிள்ளை விறைப்பு" போன்ற பதத் தொடர்களை அநியாயமாக மறைந்து போக விடாதீர்கள். வாழையடி வாழையாக எத்தனையோ பேர்கள் இந்தப் பதத் தொடர்களுக்கு இலக்காக நடந்து, இவைகளுக்குப் புதிய மெருகையும், சோபையையும் கொடுத்துப் போயிருக்கிறார்கள்.

ஆகவே, மாப்பிள்ளைகளுக்கு விறைப்பும் முறுக்கும் அவசியம் தேவை என்பது நிச்சயமாகத் தெரிகிறதல்லவா?

# கர்வ பங்கம்

கலீஞ

மாலை மணி ஐந்திருக்கும். முனிஸிபல் ார்க்கிலிருந்த ரேடியோ அலறிக்கொண் ருந்ததையும் பொருட்படுத்தாமல் ள்ளே நுழைந்தேன். மூலையிலிருந்த சன மொன்றில் ஒரு கிழவர் மட்டும் னியே உட்கார்ந்திருந்தார். அந்த ஆச த்தின் மற்றொரு கோடியில் நானும் மர்ந்தேன். அந்தக் கிழவர் பார்வைக் த் தூங்குபவர் போல் காட்சி யளித் ார். அவர் ஆழ்ந்த ஆத்ம விசாரத்தில் டுபட்டிருந்திருக்கலாம். ஆனாலும் நான் ட்கார்ந்த சிறிது நேரத்திற் கெல்லாம் வர் எழுந்து சென்று விட்டார்.

அவர் சென்று வெகு நேரமா யிருக் ாது. அவர் இருந்து விட்டுப் போன டத்திற்கு ஒரு வாலிபன் வந்து சேர்ந் ான். கிழவருக்கும், அவ்வாலிபனுக்கும் னப்போக்கிலிருந்த வித்தியாசம் என் வனத்தைக் கவர்ந்தது. அவனுக்குச் மார் முப்பது வயதிருக்கும். நன்றாய் டை யணிந்து நாகரிகமாய்க் காணப் ட்டான். அவன் முகபாவம் தோற்று த்த அவ்வளவு கவலை அவனுக் ருக்க எவ்வித நியாயமு மில்லையென னக்குத் தோன்றியது. மனச் சலிப் டன் அங்கு மிங்கும் பார்த்து என்னை ம் கடைக்கண்ணால் அவன் நோக்கிய தமானது, என்னை அவனிடம் பேச்சுக் காடுக்கத் தூண்டிற்று.

"நீங்கள் ஏதோ அஸ்வாரஸ்யமான ஷய மொன்றைப் பற்றி யோசித்துக் காண்டிருக்கிறப்போ லிருக்கிறது. அவ் ளவு எரிச்சலைக் கொடுக்கும் விஷயம் ன்னவோ?" என்றேன், அவனுக்குப் ச்சாத்தாபப்படும் முறையில்.

"எரிச்சலா? ஆமாம், என் நிலைமையில் ங்கள் இப்பொழுதிருந்தால் தெரியும் ங்களுக்கு!" என்று சொல்லிவிட்டுக் டுகடுப்புடன் சிரித்தான் அவன்.

"ஏன், என்ன சமாசாரம்?"

"என்ன போங்கள், சொன்னால் வெட் க் கேடு! நல்ல ஊர், நல்ல திருநாள்!"

"ஏன் ஸார், அப்படிச் சொல்லு றீர்கள்? ஊருக்கென்ன, பெரிய ஸ்தலம்! ருகனுடைய ஆறு படை வீடுகளில் ஒன் ல்லவா? இந்தத் திருநாளில் இங்கு வந்து முருகனைச் சேவித்துப் போவதற் கென்று தொலை தூரத்திலிருந்தெல்லாம் ஜனங்கள் வந்து போகிறார்களே?"

"போகிறார்கள், போகிறார்கள்! நானும் தான் தொலை தூரத்திலிருந்து, பெண்டு பிள்ளைகளுடன் திருநாளுக்காக வந்தேன். நீடாமங்கலம் இருக்கிறதே, உங்களுக்குத் தெரியுமோ?"

"நீடாமங்கலந்தானே! ஓ, கேள்விப் பட்டிருக்கிறேன். தவுல் வித்வான் மீ......"

"ஆ! அதே நீடாமங்கலந்தான் எங்கள் ஊர். நேற்றுக் காலையில் அங்கிருந்து புறப்பட்டுப் பிரார்த்தனை செலுத்திவிட் டுப் போக இங்கு வந்து சேர்ந்தோம். இன்று காலை பத்து மணிக் கெல்லாம் நேராய் மலை மேல் போய் ஸ்வாமி தரிசனம் செய்துவிட்டுக் கீழே இறங்கு வதற்குள் மணி மூன்றாகிவிட்டது. பெரிய வர்கள் பசியைப் பொறுத்துக் கொள்ள லாம். குழந்தைகள் என்ன செய்யும்? கதற ஆரம்பித்து விட்டன!"

ஏது, பேர்வழி பேசுகிற தினுசு ஒரு மாதிரியா யிருக்கிறதே என்று பட்டது எனக்கு. ஆனாலும் உண்மையில் பரிதாபப் படுபவன் போல் 'ச், ச்!' என்றேன். மேலும் தொடர்ந்தான் அவன்.

"அடிவாரத்தில் ஒரு இடத்திலும் சாப் பாடோ, இட்டிலி, தோசையோ கிடைக்க வில்லை. பெண்டுகளையும் குழந்தைகளை யும் ஆவினன்குடி முருகர் கோயில் முகப் பில் இருக்கச் செய்து விட்டு ஊருக்குள் போய் ஏதாவது வாங்கிவருவோ மென்று வந்தேன். அங்கும் ஹோட்டல்களில் சாப் பாடு மூந்திப் போய் விட்டது. ஒரு ஹோட்டலில் தோசை போட்டுத் தரச் சொல்லி வாங்கிக்கொண்டு வரும் வழியில் ......"

மேலே சொல்ல வெட்கப்படுபவன் போல் தயங்கினான் வாலிபன். நான் சற் றுப் பரிவுடன் அவனை நோக்கி, "உம்...... வழியில் என்ன ஆயிற்று?" என்று கேட்டேன்.

"அதோ பாருங்கள், தெரு முனை, அந்த இடத்தில் ஜனத்திரளை இடித்துத் தள்ளிக் கொண்டு வேகமாய்க் கோயிலை



நோக்கி நடந்தேன். கூட்டத்தைக் கடந்த
தும் ஒரு வெற்றிலைப் பாக்குக் கடையைப்
பார்த்தேனோ இல்லையோ, வெற்றிலைப்
பாக்கு வாங்கிக் கொள்வோமென்று,
சில்லறை எடுக்க ஜேபியில் கையை விட்
டேன். பர்ஸைக் காணவில்லை!''

"எங்கே விழுந்திருக்கும்?''

"ஹூம்.. ...விழுவாவது? ஒரு இடத்தி
லும் குனிய நிமிரக் கூட இல்லை ஸார்!
கூட்டத்தில் எவனோதான் அடித்துக்
கொண்டு போய் விட்டான்!''

"ஐயோ! அப்புறம்?''

"அப்புறமென்ன! மணிபர்ஸில் மூப்
பது ரூபாய்ச் சில்லறை இருந்தது, ஸார்!
வந்த வழியே மறுபடியும் திருப்பி வீதியை
யும் ஆட்களையும் கவனித்துக் கொண்டே
போனேன். 'அபேஸ்' பண்ணினவன்
கையில் வைத்துக் காட்டிக்கொண்டு நிற்
பானா, உங்களுக்கு? அதற்குள் எங்கே
போனானோ, அவன்? நம் பாட்டைச்
சொல்லுங்கள், இப்பொழுது! ஊர், பேர்
தெரியாத இடத்தில் குழந்தை குட்டிக
ளுடன் என்ன செய்வது? யாரிடம்
போய்ப் பணம் கேட்பது? முதலில் ஒரு
வேளைச் சாப்பாட்டைச் சொல்லுங்கள்,
ஸார்! ஆயிற்று. வெள்ளித் தேர் நாம்
இல்லாமல் நகராமல் நின்றுவிடப் போகிற
தில்லை. இம்மட்டோடு ஊர் போய்ச் சேர
வேண்டும். திருச்சி போய்விட்டாலும்,
அங்கு தெரிந்தவர்கள் அநேகம் பேர்
இருக்கிறார்கள். எவ்வளவு சௌகரியங்கள்
வேண்டுமானாலும் செய்து கொள்ள

அங்கே வசதியுண்டு; திருச்சி போவதா
லும் குறைந்த பட்சம் ஐந்து ரூபாயாவ
வேண்டுமே!......இப்படித்தான் ஸா
'தன்னூருக்கு யானை, அயலூருக்
பூனை' என்று சும்மாவா சொன்னான்
நம்முடைய தரமும் யோக்யதையு
இங்கே யாருக்குத் தெரியும்? நீடா
கலமா? சொல்லுங்கள்! 'பன்னீர்க்கடை
பழனிவேலு' என்றால் பச்சைக் கு
தைக்குக் கூடத் தெரியும். இங்கு ய
கண்டார்கள்? நாம்தான் யாரிடம் போ
சொல்லப் போகிறோம்?''

"நீங்கள் சொல்வதைப் பார்த்தா
குழந்தைகள் இன்னும் பட்டினிபோடு
யிருக்கும் போலிருக்கிறதே?''

"நான் இன்னும் அங்கு போ
வில்லையே! பர்ஸ் காணாமல் போகவு
தேடிக்கொண்டு திரும்பிவிட்டேனே!''

"ஊம்...... நீங்கள் வாங்கி வ
தோசைப் பார்சல்......?''

ஒரு விநாடி அவன் திகைப்புட
என்னைப் பார்த்து விழித்தான். ஆ
மறுகணம் சமாளித்துக் கொண்டான்!

"ஓ! அதுவா! பார்த்தீர்களா? அ
வும் எங்கேயோ தவறி விட்டிருக்க வே
டும். பர்ஸ் போன கலவரத்தில் புத்
கிலை குலைந்து போய்விட்டது, ஸார்!''

"ஸார், நான் சொல்லுகிறேனே என்
நீங்கள் வருத்தப்படக் கூடாது. என்
இருந்தாலும் தாங்கள் சுத்த அஜா
கிரதையான பேர்வழி. பெண்டு பிள்ளை
ளுடன் வந்த இடத்தில் பணப் பையை

தவற விட்டதே ஒரு பொறுப்பற்ற செய்கையாகும். தங்கள் கதையை உண்மை யென்று நம்பச் செய்யும் சாட்சியமாகிய பார்சலையும் போக்கடித்தது அதைவிடப் பொறுப்பற்ற காரியமாகும்!"

"என்ன! கதையா!......நீங்கள் நான் சொன்னதெல்லாம் 'சரடு' என்று நினைக்கிறீர்களா?"

"நான் நினைப்பதற் கென்ன ஸார் இருக்கிறது? எதற்குமே மூன் ஜாக்கிரதை வேண்டும்!"

நான் சொன்னதின் தாத்பர்யத்தை அவன் சரியாய் ஊகித்துக் கொண்டிருக்க வேண்டும். முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்கிறாற் போல் என்னை முறைத்துப் பார்த்து விட்டு எழுந்து நடந்தான்.

சிறிது நேரத்திற் கெல்லாம் ரேடியோவின் அலறல் உச்சஸ்தாயியை அடையவே, நான் வீட்டுக்குப் புறப்பட்டேன். எழுந்ததும் என் காலில் ஏதோ தட்டுப்பட்டது. குனிந்து எடுத்தேன். ஒரு பேப்பர் பார்சல்; ஆம், தோசைப் பார்சலேதான். இலையில் வைத்து பேலே ஜூஸ் பேபரால் கட்டப்பட்டிருந்தது. பாவம், அதற்குள் அந்த வாலிபன்மேல் அவநம்பிக்கைப் பட்டது மின்றி, விண்டனாகவும் பேசிவிட்டோமே! அவன் மனம் எவ்வளவு வருந்தியதோ! வெந்த புண்ணில் வேலிட்டதுபோல் அவன் பணத்தை இழந்து தவிக்கும் பொழுது, அயோக்கியப் பட்டம் வேறு! ஆகா! மனிதர்களை நிதானித்தறிவதில் நாம்தான் சாமர்த்தியசாலி என்று எப்பொழுதுமே எண்ணிவிடக் கூடாது!" என்றெல்லாம் என் மனம் எண்ணியது.

அந்தப் பார்சலுடன் அவ்வாலிபன் போன பக்கமாக நானும் போனேன். நல்ல வேளையாய் ஒரு விளக்குக் கம்பத்தின் அடியில் இன்னது செய்வதெனத் தோன்றாமல் அவன் நின்று கொண்டிருந்தான். பின்புறமாய்ச் சென்று அவன் தோளில் கையை வைத்து, "ஸார், இதோ உங்கள் தோசைப் பார்சல்!" என்றேன்.

வாலிபன் ஆச்சரியத்துடன் பார்சலையும் என்னையும் மாறி மாறிப் பார்த்து விழித்தான். நான் மேலும் சொன்னேன்:

"நான் முதலில் உங்களைப் பற்றித் தப்பிதமாய் எண்ணியதற்கு மன்னிக்க வேண்டும். இதோ, இந்த ஐந்து ரூபாயையும் வைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் அனுப்பும் பொழுது அந்த விலாசத்துக்கு அனுப்பி வைக்கலாம்" என்று சொல்லி, நான் வீட்டை விட்டுப் புறப்படும்போது என் மனைவியிடம். சண்டைபோட்டு வாங்கி வந்த ஐந்து ரூபாய் நோட்டையும், என் விலாச மிருந்த கவர் ஒன்றையும் அவனிடம் கொடுத்தேன்.

"அதைப்பற்றி என்ன ஸார்! நீங்கள் என்ன செய்வீர்கள்? சந்தர்ப்பம் அப்படி இருந்தது. தங்கள் கைக் கடனுக்கு மிகவும் நன்றியுடையவனாக இருக்கிறேன். வரட்டுமா?" என்று விடை பெற்றுக் கொண்டு வேகமாய்ச் சென்றான் பழனிவேலு.

அவனுக் கிழைத்த அபசாரத்துக்குச் சமாதானமாய் அவனுக்குக் கைக்கடன் வது கொடுக்க முடிந்ததைக் குறித்துப் பரம திருப்தி யடைந்தவனாய் நானும் வீடு திரும்பினேன். பார்க்கில் நான் உட்கார்ந்திருந்த இடத்தில் முதலில் இருந்து போன கிழவர் வந்து எதையோ பரபரப்புடன் தேடிக் கொண்டிருப்பதைக் கண்டேன். அவர் பெஞ்சைத் தடவினார். பெஞ்சின் அடிப்புறத்திலும் பக்கங்களிலும் துளாவித் துளாவிப் பார்த்தார்.

"என்ன தேடுகிறீர்கள்?" என்றேன் நான்.

"ஒரு பேபர் பார்சல்; இரண்டு வில்லைகள் வைத்துக் கட்டப்பட்டிருந்தன. அதை இங்கே ஞாபக மறதியாகத் தவற விட்டுவிட்டேன்!" என்றார் கிழவர்!

○ ★ ○

# யாருக்கு வெற்றி?

இங்கிலாந்தில் வசித்துக் கொண்டிருந்த ஒரு அமெரிக்க மாணவன் அமெரிக்காவி லிருந்த தன் நண்பனுக்கு எழுதிய கடிதம்:—

"அருமை நண்பனுக்கு, எனக்கென்னமோ இந்த யுத்தத்தில் நம் தாய் நாடுதான் ஜயிக்கும் என்று தோன்றுகிறது. ஏனென்றால் வீட்டில் அப்பாவும் அம்மாவும் சண்டை போட்டுக் கொண்டால் எப்போதும் அம்மாதான் ஜயிக்கிறள் அல்லவா? ஆகவே, தந்தையர் நாடாகிய ஜெர்மனியை நம் தாய்நாடுதான் ஜயிக்கும் என்று எண்ணுகிறேன்."




# நிஜந்தானா?

**பாப்பா**

"ஸார்!" என்ற குரல் வாசலிலிருந்து வந்தது. தரையைக் கட்டை விரலால் கீறிய வண்ணம் ஏதோ யோசித்துக் கொண்டிருந்த ராவ்சாஹிப் நடேசய்யர் நிமிர்ந்து பார்த்தார்.

"தாயில்லாக் குழந்தைகளுக்குச் சாதம் போடுகிறேன். தங்களைப் போன்ற பெரிய மனிதர்கள் ஏதாவது கிருபை செய்ய வேண்டும்" என்றார் வந்தவர்.

ராவ்சாஹிப் நடேசய்யர் அவரை வெறித்துப் பார்த்தார். அம்மனிதனைத் தாம் நம்ப வில்லை என்பதை அவர் முகம் எடுத்துக் காட்டிற்று.

வந்தவர் அதை லட்சியம் செய்யவில்லை. "நம்பாவிட்டால் நீங்களே நேரில் வந்து பார்த்துக் கொள்ளுங்கள், ஸார்!" என்று தம் விலாசத்தைக் கொடுத்தார்.

இவ்வளவு தூரம் சொன்ன பிறகும் தாம் சும்மாயிருப்பது நன்றாயிராதென்று ஐந்து ரூபாயை அவரிடம் கொடுத்து அனுப்பி விட்டு, மீண்டும் தரையைக் கீறுவதில் மூழ்கினார் ராவ்சாஹிப்.

அன்றிரவு ராவ்சாஹிப்புக்குத் தூக்கமே பிடிக்கவில்லை. "எப்பொழுது பொழுது விடியும்?" என்று எதிர் பார்த்தவாறே படுக்கையில் புரண்டு கொண்டிருந்தார். அவர் எதிர்பார்த்தபடி பொழுதும் விடியா மற் போகவில்லை; விடிந்தது; எழுந்தார். அவசரம் அவசரமாகக் குளித்துவிட்டு, எட்டரை மணிக்கே சாப்பிட்டுவிட்டு, அந்தத் தாயில்லாக் குழந்தைகள் இருந்து வந்த வீட்டை அடைந்தார். காரிலிருந்து இறங்கி உள்ளே நுழைந்ததும் வாசலில் விளையாடிக் கொண்டிருந்த எட்டுக் குழந்தைகள், "அப்பா! அப்பா!" என்று கத்திக் கொண்டே உள்ளே ஓடின.

குழந்தைகள் கூப்பிட்டதும் ராவ்சாஹிப் அவர்களிடம் ஐந்து ரூபாய் வாங்கிச் சென்ற வர், கையில் கரண்டியுடன் வெளியே வந் தார். "இவர்கள்தான் தாயில்லாக் குழந்தை களா?" என்று கேட்டார் ராவ்சாஹிப்.

"ஆமாம்; என்னுடைய மனைவி இறந்து ஒரு வருஷமாகிவிட்டது. இப்போது நான் தான் இந்தத் தாயில்லாக் குழந்தைகளுக்குச் சமைத்துப் போடுகிறேன்!" என்றார் அவர்!

- ராகவன் -

# அன்பின் துன்பம்



விந்தன்

விய வருஷம் பிறந்து விட
தல்லவா? — எனது நண்ப
நாராயணனுக்குக் கல்யாணமா
இத்துடன் ஏழு வருஷங்களா
விட்டன. இன்னும் அவனுடை
வீட்டில் அவனையும் லக்ஷ்மியை
யும் தவிர வேறு யாரும் இலை
யாது! வேலைக்குப் போகு
நேரத்தைத் தவிர மற்ற நேர
களில் அவன், "லக்ஷ்மி!" என
வேண்டியது: அவள் "ஏன்!
என வேண்டியது! — மாதாந்தி
பட்ஜட், மைத்துனன் வருகை
சர்க்கரைப் பஞ்சம், அரிசி கெடு
கடி, அடுத்த வீட்டுக்காரியின்
புதுப் புடவை இவற்றைப் பற்றி
ஏதாவது பேச வேண்டியது
அவ்வளவுதான்! — "அப்ப
பப்பா!", "அம்மம்மம்மா!
என்று தெத்தித் தெத்திப் பே
வதற்கும், "என் கண்ணே
லேயோ!" என்று கொஞ்சுவத
கும், இடையிடையே, 'ங்கா
ங்கா' என்ற இன்ப நாத
எழும்புவதற்கும், 'ச், ச், ச்!'
என்ற இன்ப ஒலி கிளம்பு
தற்கும் என்ன வேண்டுமோ
அதுதான் அவர்களுக்கு இல்லை

அருணோதயத்தில் அடுத்த
வீட்டுக் குழந்தை 'வீல், வீல்'
என்று கத்தும். அப்பா அந்த
நேரத்தில்தான் ஏதோ விழுந்து
விழுந்து எழுதிக் கொண்டிருப்
பார். அடுப்பண்டை ஏதோ
காரியமாக இருக்கும் அம்மா
"எழுதிக் கிழித்தது போதும்,
அந்தக் குழந்தையைக் கொஞ்சம்
எடுத்து வைச்சுக்கோங்கோ!"
என்பாள். "நீ மட்டும் என்னடி
இப்போ பிரமாதமாக் கிழிச்சுண்
டிருக்கே?" என்பார் அப்பா.
இருவரிடையேயும் வார்த்தை
வளர்ந்து கொண்டே போகும்.
அவரவர்களுக்கு இருக்கும் லட்
சணத்தைப் பற்றி ஒருவரை
யொருவர் வர்ணிக்க ஆரம்பித்து
விடுவார்கள். கடைசியில், அம்மா
வும் குழந்தையோடு சேர்ந்து
அழுது தீர்க்கும் கட்டம் வரும்
வரையில், நாராயணனும் லக்ஷ்மி
யும் அந்தக் குழந்தை அழுவதை
ஆனந்தமாக அனுபவித்துக்
கொண்டிருப்பார்கள்!

"இந்தக் கிராமபோன் கம்
பெனிக்காரர்கள் எதை யெல்
லாமோ 'ரிகார்ட்' செய்கிறார்

…னே, ஒரு குழந்தையை நன்றாக் கத்த விட்டு 'ரிகார்ட்' செய்யக் கூடாதோ!" என்பாள் லக்ஷ்மி.

"அவர்களென்ன, இந்த ரேடியோக் காரர்களையும்தான் பாரேன்! தினசரி எத்தனையோ பேரை மாறி மாறி அழ வைக்கிறார்கள்!—ஒரு குழந்தை ஆனந்தமாக அழுவதற்கு அரை மணி நேரம் 'சான்ஸ்' கொடுக்கக் கூடாதோ!" என்பான் நாராயணன்.

என்றைக்காவது ஒருநாள் என் அருமைப் பெண்ணைப் பற்றி நான் பேச்சோடு பேச்சாக, "சுதா, சுவரைத் துணையாகக் கொண்டு நடக்க ஆரம்பித்தாலும் ஆரம்பித்தாள், என் அறையில் வைத்தது வைத்தபடி ஒன்றுமே இருப்பதில்லை!" என்பேன்.

உடனே, நாராயணன் தன் மேஜைமீது ஒழுங்காக அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் புத்தகங்களைப் பார்த்துப் பெருமூச்சு விடுவான்! லக்ஷ்மி சமையலறையில் எல்லாம் வைத்தது வைத்தபடியே இருப்பதைப் பார்த்து விட்டுச் சோகமே உருவாய்ச் சுவரோடு சுவராகச் சாய்ந்து விடுவான்!

அவர்கள் போகாத கோயில்களில்லை; ஆடாத தீர்த்தங்களில்லை; தரிசிக்காத தெய்வங்களில்லை; வலம் வராத மரங்களில்லை; அனுஷ்டிக்காத விரதமில்லை!

இருந்தும் என்ன?—பயன்?—000...!

## 2

அப்பாடி!—ஒரு வழியாக அந்த இளம் தம்பதிகளுடைய எண்ணம் ஈடேறுவதற்கு எட்டாவது வருஷமும் பிறக்க வேண்டுமென்று இருந்தது போலும்!—"வெந்நீர் போட்டு விட்டேன்!", "காப்பி தயார்!", "இலை போட்டாச்சு!" என்றெல்லாம் இத்தனை நாளும் லக்ஷ்மியே முன் வந்து நாராயணனை அழைத்தது போக, இப்பொழுது நாராயணனே முன் வந்து, "வெந்நீர் போட்டாச்சா?", "காப்பி தயாராகி விட்டதா?", "இலை போட்டாய் விட்டதா?" என்றெல்லாம் விசாரிக்க நேர்ந்து விட்டது!

முன்னெல்லாம், "லக்ஷ்மி!" என்று ஒரு முறை கூப்பிட்டாலே போதும்; "ஏன்!" என்று எங்கே யிருந்தாலும் சிட்டாய்ப் பறந்து ஓடி வருவாள். இன்று அப்படி யில்லை. "லக்ஷ்மி, லக்ஷ்மி!" என்று லக்ஷோப லக்ஷம் தடவை அடித்துக் கொண்டாலும், "உம்,—உம்!" என்ற முனகலைத் தவிர, அவன் அவளை நேரில் காண முடியாது!

"இதென்னடா, இது!" என்று அலுத்துக் கொண்டே நாராயணன் எழுந்து உள்ளே போவான்.

அவள் எண் சாண் உடம்பையும் ஒரு சாண் உடம்பாக ஒடுக்கிக் கொண்டு எங்கேயாவது ஒரு மூலையில் படுத்துக் கிடப்பாள்.

"என்ன, லக்ஷ்மி!" என்று விசாரிப்பான் நாராயணன்.

"ஒன்று மில்லை!" என்பாள் லக்ஷ்மி, 'மது மறைந்துண்டவன் மகிழ்ச்சி' போல!

"என்னதான் சொல்லேன்!" என்று அவளைத் தூக்கி உட்கார வைப்பான் நாராயணன்.

"கொஞ்சம் மயக்கமா யிருக்கிறது; அவ்வளவுதான்! சிறிது நேரம் படுத்து எழுந்தால் சரியாய்ப் போகும்!" என்று சொல்லிவிட்டு, 'சட்'டென்று படுத்துக் கொள்வாள் லக்ஷ்மி.

"சமையல் செய்வதில் சகதர்மிணிக்குநான்
சளைப்பதில்லை காணென்று கும்மியடி!"

என்று பாடிக் கொண்டே சமையலறைக்குள் நுழைவான் நாராயணன். அவனே வெந்நீர் போட்டுக் குளித்து விடுவான்; அவனே சமைத்தும் சாப்பிட்டு விடுவான். கடைசியில் லக்ஷ்மியையும் அழைப்பான், சாப்பிடுவதற்கு!

"பழிக்குப் பழி வாங்க இதுதான் சரியான சந்தர்ப்பம்; நாம் சமைத்துக் கொஞ்சம் நன்றாயில்லாமலிருந்தால் அவர் என்னவெல்லாம் சொல்வாரோ, அதையெல்லாம் அப்படியே இப்போது திருப்பிச் சொல்லிவிட வேண்டும்!" என்று எண்ணிக்கொண்டே எழுந்திருப்பாள் லக்ஷ்மி. ஆனால், ஒரு வாய் சாதத்தைத் தான் எடுத்து வைப்பாள். அதற்குள் குமட்டிக்கொண்டு வந்து விடும். எழுந்து வாசலுக்கு ஓடி விடுவாள்.

"என்ன, லக்ஷ்மி! என்னுடைய சமையல் அத்தனை சுகமா யிருக்கிறதாக்கும்!" என்று அசட்டுப் பெருமையுடன் சிரிப்பான் நாராயணன். லக்ஷ்மியும் அவனுடைய சிரிப்பில் கலந்து கொள்வாள்.

நாராயணன் காலால் இட்ட வேலையைத் தலையால் செய்து வந்த லக்ஷ்மியிடம் இப்பொழுது எத்தனை மாறுதல்! ஒரு நாள் வேலைக்குப் போகக் கிளம்பிய நாராயணன் திடீரென்று வாசலில் நின்றபடியே, "லக்ஷ்மி! அங்கே என் மேஜையில் பேனாவை மறந்து வைத்துவிட்டேன். அதைக் கொஞ்சம் எடுத்துக் கொண்டு வாயேன்!" என்றான்.

அதற்கு லக்ஷ்மி அளித்த பதில் அவனைத் தூக்கிவாரிப் போடுவதாயிருந்தது. "எனக்கு உடம்பை என்னவோ செய்

கிறது; நீங்களே வந்து எடுத்துக் கொண்டு போங்கள்!" என்றான் அவன்.

இம்மாதிரி விஷயங்களுக்காக நாராயணன் இப்பொழுதெல்லாம் அவளைக் கோபித்துக் கொள்வதில்லை. ஏனெனில், அவனுக்கும் விஷயம் தெரியாமற் போகவில்லை. இல்லையென்றால் இத்தனை நாளும் அவள் விரும்பிக் கேட்டதையே வாங்கிக் கொடுக்காத நாராயணன், இப்பொழுது அவள் கேட்காததையெல்லாம் வாங்கிக் கொண்டு வந்து கொடுப்பானா?

"அன்றைக்கு ஒரு நாள் வாங்கி வந்தீர்களே ரோஸ் ஜாங்கிரி, அது ரொம்ப ரொம்ப நன்றாயிருந்தது!" என்று லக்ஷ்மி இப்பொழுது ஒரு வார்த்தை சொன்னால் போதும்; அன்று மாலையே அதேமாதிரி ஜாங்கிரியில் ஒரு டஜன் வந்து சேர்ந்து விடும்!

"நேற்றுக் காலையில் லீலா இங்கே வந்திருந்தாள். ரேடியோ வளையலாம், ஒன்றுக்கு இரண்டு சவரன் ஆகிறதாம்; கைக்கு ஒன்று செய்து போட்டுக் கொண்டிருக்கிறாள். பாதகமில்லை, பார்ப்பதற்கு நன்றாய்த்தான் இருந்தது!" என்று சொல்ல லக்ஷ்மி வாயெடுக்க வேண்டியதுதான்; நாராயணன், "அதற்கென்ன, இன்னும் நாலு நாளைக்கெல்லாம் நாமும் அதேமாதிரி இரண்டு செய்து விட்டால் போச்சு!" என்பான்.

"எதிர்வீட்டுக்காரி கட்டிக்கொண்டிருக்கிறாள், ஏரோப்ளேன் பார்டர் போட்ட புடவை! எப்படியிருக்கிறது, தெரியுமா? விலை எண்பது ரூபாய்தானாம்!" என்பாள் லக்ஷ்மி.

அவ்வளவுதான்; அந்த மாதக் கடைசியில் சம்பளம் வாங்கியதும், நாராயணனின் முதல் வேலை மேற் சொன்ன புடவையை வாங்குவதாய்த்தானிருக்கும்!

## 3

நாராயணன் இப்படியெல்லாம் லக்ஷ்மியைக் கண்ணுங் கருத்துமாகக் கவனித்து வந்தும், அவளுடைய வேதனை மட்டும் குறையவில்லை. ஒன்று போனால் ஒன்றாக வந்து கொண்டே இருந்தது; அதற்கேற்றாற்போல் டாக்டர் 'பில்'லும் நீளுவதும் ஏறுவதுமாக இருந்தது.

ஒரு நாள் நாராயணன் ஏதோ எண்ணித் துணிந்தவனாய், "லக்ஷ்மி, லக்ஷ்மி! இது எத்தனையாவது மாதம்?" என்று சிரித்துக் கொண்டே கேட்டு விட்டான்.

அவளும் பதிலுக்கு நாணிச் சிரித்துக் கொண்டே, "ஆறாவது!" என்று சொன்னவுடன் உள்ளே ஓடி விட்டாள்!

அவளைப் பின் தொடர்ந்து சென்ற நாராயணன், "அப்படியானால் அடுத்த மாதம் வந்து உன்னை அழைத்துக்கொண்டு போகும்படி உன் அம்மாவுக்குக் கடிதம் எழுதுகிறேன்!" என்றான்.

தலையைக் குனிந்த வண்ணம் தன் சேலை மேலாக்கின் ஒரு மூலையை முறுக்கி விட்டுக் கொண்டே, "அதற்குள் என்னை அங்கே அனுப்பி வைத்துவிட்டு, நீங்கள் சாப்பாட்டுக்கு என்ன செய்வீர்களாம்?" என்று கேட்டாள் லக்ஷ்மி.

"நான் எக்கேடாவது கெட்டுப் போகிறேன்! என்னுடைய சுகத்திற்காக உன்னுடைய வேதனையை நீ வேண்டுமானாலும் சகித்துக் கொண்டிருக்கலாம்; என்னால் ஒரு நிமிஷமும் இனிமேல் சகித்துக் கொண்டிருக்க முடியாது!"

"ஊஹூம்; நீங்கள் சகித்துக் கொள்ளத்தான் வேண்டும்!"

"முடியாது, முடியாது! எல்லாம் நானே சமைத்துச் சாப்பிட்டுக் கொள்வேன்; நீ போய் உடம்பைப் பார்த்துக் கொண்டு, வா!"

"ஆமாம்; உங்கள் சமையலும் நீங்களும்...!"

"இல்லா விட்டால் ஹோட்டலில் சாப்பிட்டுக் கொள்கிறேன்!"

"ஐயோ! உங்களுக்கு ஹோட்டல் சாப்பாடும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம்......!"

"அதெல்லாம் முடியாது! அடுத்த மாதம் நீ உன் அம்மாவுடன் போய்த்தான் ஆக வேண்டும்!" என்று உச்சஸ்தாயியில் இரைந்தான் நாராயணன்.

காதைப் பொத்திக் கொண்ட லக்ஷ்மி, வாயையும் பொத்திக் கொண்டாள். ஆனால், ஏனோ அவளுடைய உள்ளம் மட்டும் தன்னுடைய விஷமத்தனத்தை ஆரம்பித்து விட்டது.

"இவர் ஏன் நம்மை இப்படி ஓரேயடியாய்த் தட்டிக் கழிக்கப் பார்க்கிறார்! நிஜமாகவே நம்மீது இருக்கும் அன்பினாலா, அல்லது வேறு எவளையாவது...!"

ஒரு கணம் இந்த விபரீத எண்ணத்துக்கு இலக்கான அவள் இதயம், அடுத்த கணம் அற்பத்தனத்தில் இறங்கிற்று!

"ஒருவேளை பிரசவச் செலவுக்காகப் பயந்து இப்படி ஏற்பாடு பண்ணுகிறாரோ!"

இந்த மாறுதல் அவள் எண்ணத்தில் மட்டுமல்ல; நாளடைவில் அவளுடைய நடையிலும் உடையிலும் பாவனையிலுமே கலந்து விட்டது!

நாராயணன் இதையெல்லாம் பொருட்படுத்தவில்லை. அவன் பாட்டுக்கு அத்தைக்கு ஒரு கடிதம் எழுதிப் போட்டு

விட்டான். அவளும் வந்தாள்; லக்ஷ்மியை அழைத்துக் கொண்டு போனான்.

## 4

எட்டு வருஷ காலம் இணை பிரியாமலிருந்த நாராயணனுக்குத் தனிமையைத் தாங்குவது அசாத்தியமாயிருந்தது. சில சமயம் அவன் தன்னை மறந்து, "லக்ஷ்மி!" என்று கத்தி விடுவான். பிறகு, சமாளித்துக் கொண்டு, "ஓஹோ! அவள் இங்கே இல்லையா!" என்று தன்னைத் தானே தேற்றிக் கொண்டு விடுவான்!

ஒரு மாதத்திற்குப் பிறகு கூட, லக்ஷ்மி வீட்டில் நடமாடிக் கொண்டிருக்கிறாள் என்ற பிரமையுடனேதான் நாராயணன் இருந்தான். பிரசவத்துக்கு முன் அவளை ஒரு தடவை போய்ப் பார்த்துவிட்டு வர வேண்டுமென்று அவன் உள்ளம் துடியாய்த் துடித்தது. உடனே ஒரு வாரம் ரஜா எடுத்துக் கொண்டு ஊருக்குக் கிளம்பினான்.

ரயிலில் ஏறி உட்கார்ந்ததும், "அவள் எப்படியிருக்கிறாளோ!" என்று ஏங்கிற்று அவன் மனம். இந்த நிலையில் அவனுடன் பிரயாணம் செய்பவர்கள் எல்லோருமே, "அவள் எப்படியிருக்கிறாளோ!" என்று லக்ஷ்மியை நினைத்து ஏங்க வேண்டுமென்பது அவனுடைய எண்ணம் போலும்!—இல்லையென்றால், அவர்கள் பாட்டுக்குத் தங்களுக்குள் பேசிச் சிரிப்பது கூட அவனுக்கு ஏன் எரிச்சலை உண்டாக்க வேண்டும்?

பணக்காரன் ஏழையை லட்சியம் பண்ணாமற் போவது போல, 'மெயில்' சின்னஞ் சிறு ஸ்டேஷன்களை லட்சியம் செய்யாமல் ஓடிக் கொண்டிருந்தது. அதைவிட வேகமாக நாராயணனின் மனோரதமும் ஓடிக் கொண்டிருந்தது. அவன் ரயிலை விட்டு இறங்கியதும் ஓடோடியும் சென்று பஸ்ஸைப் பிடித்தான். வீட்டை நெருங்கியதும், உள்ளே லக்ஷ்மியும் அவனுடைய அம்மாவும் பேசிக் கொண்டிருந்தது அவன் காதில் விழுந்தது. "அம்மாடி! அந்த மட்டும் லக்ஷ்மி சௌக்யமாய்த்தான் இருந்து கொண்டிருக்கிறாள்!" என்று ஆறுதல் அடைந்த வண்ணம், நாராயணன் சற்று நின்று அவர்கள் பேசுவதை ஒட்டுக் கேட்டான்.

"அவன் அங்கே எப்படியிருக்கிறானோ!—வீட்டில்தான் வேறு யாரும் கிடையாதே, உன்னை ஏன் இங்கே ஏழாவது மாதமே அனுப்பி வைக்க வேண்டும்? ஒன்பதாவது மாதம் அனுப்பி வைத்திருக்கக் கூடாதோ?" என்றாள் லக்ஷ்மியின் தாயார்.

"எல்லாம் காரியமாகத்தான் இருக்கும்! தான் சாக யாராவது மருந்து தின்பார்களோ? ஐம்பதும் நூறுமாக யார் டாக்டர்களுக்குக் கொட்டிக் கொடுப்பதென்று இங்கே அதற்குள் அனுப்பி வைத்து விட்டார்!" என்றாள் லக்ஷ்மி!

"ஆமாம்: வண்டு மதுவைத்தானே விரும்புகிறது, மலரையா விரும்புகிறது!" என்று அவர்களுடைய பேச்சுக்கு முத்தாய்ப்பு வைத்தார் லக்ஷ்மியின் தகப்பனார்.

இதைக் கேட்ட நாராயணன் தலையில் இடி விழவில்லை; இமயமலையே பெயர்ந்து வந்து விழுந்தது!

"என்ன உலகம் இது! அன்பின் லட்சணம் இதுதானா? இத்தனை நாளும் நான் பட்ட பாடெல்லாம் எனக்காகத்தானா? அவளுக்காக இல்லையா? அன்று கஞ்சியைக் காலில் கொட்டிக் கொண்டு, கதிகலங்கிப் போனதுகூட அவளுக்காக இல்லையா? மஞ்சள் தூளை மிளகாய்த் தூள் என்று எண்ணி, அன்றிரவு கத்திரிக்காய்க் கறியில் கொட்டி விட்டு, கடைசியில் மருந்தை விழுங்குவதுபோல் விழுங்கித் தொலைத்தேனே, அதுகூட அவளுக்காக இல்லையா? அதெல்லாம்தான் போகட்டும்; 'எப்படியாவது அவள் சந்தோஷமாயிருந்தால் போதும்!' என்று எண்ணி, அளவுக்கு மீறி அங்கங்கே கடனை வாங்கி விட்டு இப்போது அவஸ்தைப் பட்டுக் கொண்டிருக்கிறேனே, அதுகூடவா அவளுக்காக இல்லை?...."

## கண்ணாடிமேல் பழி!



இப்படி யெல்லாம் எண்ணி ஏங்கிய நாராயணன், சிறிது நேரத்திற்குப் பிறகு, "நாம் எங்கே இருக்கிறோம்?" என்று தன்னைக் கவனித்துக் கொண்டான். அப்போது அவன் சென்னையை நோக்கிப் போகும் ரயிலில் பிரயாணம் செய்து கொண்டிருந்தான் என்று தெரிந்தது!

"இதென்ன இது! இவ்வளவு தூரம் வந்து லக்ஷ்மியைப் பார்க்காமலா போகிறோம்?—ரொம்ப நல்லதாய்ப் போயிற்று! அவளே வந்து நம்மை என்று பார்க்கிறாளோ, அன்று பார்க்கட்டும்; பேசட்டும்!—அதுவரை நாம் அவளைப் பார்க்கவும் வேண்டாம்; பேசவும் வேண்டாம்!"

* * *

இந்தச் சம்பவம் நடந்த இரண்டு மூன்று வருடங்களுக்குப் பிறகு ஒருநாள் நான் அவர்கள் வீட்டுக்குப் போயிருந்தேன். அப்போது நாராயணனும் லக்ஷ்மியும் ஒருவருக் கொருவர் முதுகைக் காட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தனர். அவர்களுடைய அருமைக் குழந்தையான மணி, தன் சின்னஞ் சிறு கைகள் இரண்டையும் பின்னால் சேர்த்துக் கட்டிக்கொண்டு ஏகக் கவலையோடு உலாவிக் கொண்டிருந்தான். அவன் கமல வாய் அடிக்கடி, "அம்மாவும் அப்பாவும் ஏன் பேசமாட்டேன்கிறா!" என்று முணுமுணுத்துக் கொண்டிருந்தது.

அந்தப் 'பேசும் பொற் சித்திர'த்தைக் கவனித்த வண்ணம் நான் கதவிற்குப் பின்னால் நின்றேன்.

திடீரென்று மணி தன் அம்மாவை நெருங்கி, "அம்மா, அம்மா! நீ ஏன் அம்மா அப்பாவுடன் பேச மாட்டேன்கிறே?" என்று கேட்டான்.

"நானா பேசமாட்டேன்கிறேன்? அவர்தானேடா என்னுடன் பேசமாட்டேன்கிறார்!" என்றாள் லக்ஷ்மி.

"அப்பா, அப்பா! நீ ஏன் அப்பா அம்மாவுடன் பேசமாட்டேன்கிறே?"

"நானா பேசமாட்டேன்கிறேன்? அவள்தானேடா என்னுடன் பேசமாட்டேன்கிறாள்!" என்றான் நாராயணன்.

அவ்வளவுதான்; "இதோ, நான் பேசுகிறேன்!" என்று நாராயணனை நோக்கித் திரும்பினாள் லக்ஷ்மி.

"இதோ, நானும்தான் பேசுகிறேன்!" என்று லக்ஷ்மியை நோக்கித் திரும்பினான் நாராயணன்.

இந்த நிலையில் இருவரும் ஏககாலத்தில் 'கொல்' லென்று சிரித்து விட்டனர்.

நானும் மணியும் மட்டும் சும்மா யிருப்போமா?—நாங்களும் அவர்களுடைய சிரிப்பில் கலந்து கொண்டோம்!

# வான சஞ்சாரம்

இசைத்தேனீ

23-ல் சென்னையில் ஏ. எம். சங்கர சாஸ்திரி வீணையில் வாசித்த கல்யாணி ராகம், தானம் பல்லவிக் கச்சேரி கவனிக்கத்தக்கதாயிருந்தது. மிருதுவான மீட்டுடன் ராகத்தை விஸ்தாரமாயும், அழுத்தமாயும், நிதானமாயும் வாசித்தார். கமகத்துக்குக் குறைவில்லை. தானத்திலும் பல்லவி ஸ்வரத்திலும் பலநாத வேலைப்பாடுகளைக் காட்டினார்.

24-ல் கச்சேரிகளில் சென்னையில் வி. பி. சாரதா, ஆர். ஜயலக்ஷ்மி இருவரும் சேர்ந்து பாடியது மிகச் சிறப்பாயிருந்தது. நாராயணி, ஜயந்தஸ்ரீ ராகங்கள் நற் சொரூபங்களாயிருந்தன.

அன்றிரவு அதே நிலையத்தில், வி. எஸ். ராஜத்துக்கும் [illegible] கணிப்பும் மதுரமும் கொண்ட குரலில், ஸிம்மேந்திர மத்யமம், வாசஸ்பதி ராகங்களை வெகு நேர்த்தியாய் வழங்கினார்.

25-ல் திருச்சியிலிருந்து கேட்ட மலைப்ப சாஸ்திரியின் கச்சேரி உயர்ந்த ரகமாயிருந்தது. தடித்த சாரீரம், நல்ல உதவுபடி, பிர்க்காப் பொழிவு இவை கொண்டு ஆபி. சாவேரி ராகங்களைத் திறம்படக் கையாண்டார். 'நீலகண்ட' 'ஜனனி' உருப்படிகளில் நிரவல் ஸ்வரங்கள் ஜோராயிருந்தன.

அன்று அதே நிலையத்தில் திருப்பத்தூர் செல்லம்மாளின் கானமும் கவனத்தை யிழுத்தது. சாமா, ஆபோகி ராகங்கள் [illegible].

27-ல் சென்னையில் டி. ஆர். மகாலிங்கத்தின் ஒருமு நேர வேணுகானக் கச்சேரி சென்ற வார முதல்தர நிகழ்ச்சிகளில் ஒன்றாகும். ஹரிகாம்போதியும், பல்லவி ராகமாக சங்கராபரணமும், மிக நிதானமாயும் வளமாயு மிருந்தன. பழையனவைகளாகக் கருதப்படும் 'மோக்ஷமு கலதா' 'எந்தரா நீதன' கிருதிகளும் அவைகளின் ஸ்வரப்ரஸ்தாரமும் நேர்த்தியாயிருந்தன.

அன்று அதே நிலையத்தில் பாடிய என். துரைராஜனுக்குச் சற்றுப் பருத்த சாரீரம். பேகடை ராகமும் 'நீவே கதி' [illegible] கிருதியும் ரசிக்கக் கூடியவைகளாக இருந்தன.

28-ல் சென்னையில் பிற்பகலில் கேட்ட விழுப்புரம் வரதராஜய்யங்காரின் ஒரு மணி நேரக் கச்சேரி எதிர்பார்த்தபடி ஜோராயிருந்தது. சாரீரத்தின் நல்ல உதவுபடியும் பிர்க்கா பொழிவும் கொண்டு சங்கராபரணம், பைரவி ராகங்களை விஸ்தாரமாய்ப் பாடினார்.

29-ல் திருச்சியில் திருப்பாம்புரம் சுவாமிநாத பிள்ளையின் வேணுகானம் சிறப்பாயிருந்தது. ஸ்ரீரஞ்சனி, விஜயநாகரி, ஹரிகாம்போதி, மோஹன ராகங்களும், அவைகளின் உருப்படிகளும் சம்பிரதாய முறையாயும் கச்சிதமாயும் இருந்தன.

அன்று சென்னையில் கேட்ட வேணுச் சுப்ரமணிய ஐயர், டி. வெங்கடேசன் இவர்களின் கானங்கள் நன்கு யிருந்தன. முதல்வரின் முகாரி, சக்ரவாகம், மயூரத்வனி ராகங்களும் முதல்தரமாயிருந்தன. இரண்டாமவர் தர்பார், ஆபி, [illegible] ராகங்களும் '[illegible]' கிருதியும் தரமாயிருந்தன.






# டால்டாவில் வறுத்த பூரிகள் வாயில் கரையுகின்றன—மேலும் ஊக்கத்தையும் அளிக்கின்றன!

டால்டா உங்கள் தின்பண்டங்களை ருசியுள்ளதாகச் செய்யும் வஸ்துமட்டுமன்று—அதுவே ஊக்கமளிக்கும் உணவு! எளிதில் ஜீரணமாகக் கூடியதும், விடமின் நிரம்பியதுமான இச் சமையல்செய்ய உதவும் சாதனத்தின் அறிந்த சத்தையளிக்கும் திறமையைக் கொண்டு உங்கள் தினந்தோறுமுள்ள சாப்பாட்டைச் சீர்ப்படுத்திக் கொள்ளுங்கள். டால்டா ஒவ்வொரு ஸ்திரீக்கும் ஒரு நன்கொடை—அது அவர் தயாரிக்கும் சாதாரண தின்பண்டங்களுக்கு விசேஷச் சுவையை யளிப்பதோடு அவர் குடும்பத்திற்கு அதிகப்படியான ஊக்கத்தையும் கொடுக்கிறது.

★ ஆங்கிலத்தில் மட்டும் எழுதப்பட்டுள்ள டால்டா சமையல் புத்தகத்தின் உதவியுடன் உங்கள் சாப்பாட்டுத் திட்டத்தை அமையுங்கள். சத்தைத் தரும் திறமைக்கென தாராய்ந்தெடுத்த சுவையுள்ள 150-க்கு மேற்பட்ட இந்தியத் தின்பண்டங்களைப் பக்குவம் செய்யும் முறைகள் இதில் அடங்கியிருக்கின்றன. உங்கள் புத்தகத்திற்கு Dept. A461 P.O. Box No. 353, Bombay, என்ற விலாசத்திற்கு நான்கு அணா ஸ்டாம்பு அனுப்புங்கள்.




HVM. 48-23 TM

THE HINDUSTAN VANASPATI MANUFACTURING CO., LTD.

# படித்துப் பார்!

## போட்டி ஒழிக

[ஆசிரியர்: ராஜாஜி: பிரசுரம்: தமிழ்ப் பண்ணை, தியாகராய நகர், சென்னை: விலை: அணா 12.]

வேதாந்தத்தைப் பற்றி நம்மில் பலருக்கு அரைகுறை ஞானம்தான். இதனால் ஏற்படும் தொந்தரவு பற்றி ராஜாஜி முகவுரையில் அழகாகச் சொல்கிறார்: "சரியாக ஆராய்ந்து தெரிந்துகொள்ளவும் மாட்டோம். தெரியவில்லை என்பதை ஒப்புக்கொள்ளவும் மாட்டோம்."

இருந்தாலும் "நாம் அடிக்கடி வேதாந்தமும் தரும சாஸ்திரமும் உலகத்துக்கு உதவாது: ஏட்டுக்குத்தான் சரி" என்று சொல்லி வருகிறோம். பிழை பட்ட வாழ்க்கை முறையில் அகப்பட்டுக் கொண்டு தருமத்தையே குறை கூறுகிறோம்.

நம்முடைய வாழ்க்கையில் என்ன பிழை?

"சமூகத்திற்கு வேண்டிய காரியங்கள் தனி மனிதர்களுடைய லாபத்திற்கென்று வியாபாரமாகவும் தொழில்களாகவும் வகுக்கப் பட்டு மக்களுடைய வாழ்க்கையானது ஒரு பெரும் போட்டிப் பூசலாக நடந்துவருகிறது."

இந்த வாழ்க்கை முறை ஒழிய வேண்டும். புது வாழ்க்கை முறையில் எல்லோரும் சமம், யாவரும் உண்ண வேண்டும், யாவரும் உடுக்க வேண்டும் என்ற தர்ம நியாய உணர்ச்சி எல்லாருடைய உள்ளத்திலும் நிலவ வேண்டும்.

ஆகவே, "சுயநல முயற்சிகளுக்குத்தான் வேதாந்தம் பகை. சமுதாய நன்மைக்காகச் செய்யவேண்டிய முயற்சிகளுக்கு வேதாந்தம் நல்ல சாதனமாகும்" என்கிறார் ராஜாஜி.

கடைசியாக, "வேதாந்தமும், சமுதாயப் பொது வுடைமையும், பௌதிக ஆராய்ச்சி உண்மையும் தற்கால உலக வாழ்க்கைக் வேண்டிய மூன்று பெரும் விஷயங்கள். இந்த புது பிரஸ்தான த்ரயத்தை பாரத மக்கள் த வாழ்க்கையில் ஒப்புக்கொண்டு புது வழியடைந்தால் ஆசியாவிலே இந்தியா சந்தே மில்லாமல் முதல் ஸ்தானம் அடையும்; உலக துக்கும் வழி காட்டும்" என்று முடிவு கட்டுரு

வேதாந்தம், பௌதிக சாஸ்திரம், பொது உடைமைக் கொள்கை ஆகிய மூன்றையு ஒப்பிட்டுச் சமரசப்படுத்தி, சிக்கலான வி யத்தை மிகவும் தெளிவாக்கி, ராஜாஜி எழு யுள்ள இந்தச் சின்னஞ் சிறு நூல், புது உலகத்தில் போட்டியே யில்லாத ஒப்பற் புஸ்தகமாக விளங்குகிறது.

## ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய புஜங்கம்

[தமிழுரை: சாஸ்திர ரத்னம் தேதியூ ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரியார்; பிரசுரம் கிரி பிரதர்ஸ், திருவல்லிக்கேணி, சென்னை விலை ரூ. 1—8—0.]

திருச்செந்தூர் முருகப் பெருமானிடம் ஈடு பட்ட பக்தர்கள் எத்தனையோ பேர். அவ களில் சகல சாஸ்திரங்களையும் கரைகண்ட மகா ஞானி ஆதி சங்கரரும் வட மொழியி முப்பத்திரண்டு பாடல்கள் பாடி ஒரு புஜங்க செய்திருக்கிறார் என்று அறியும்போது திரு செந்தூர் முருகப் பெருமான் எவ்வளவே அதிர்ஷ்டசாலி என்று தோன்றுகிறது.

சாஸ்திர ரத்ன தேதியூர் ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகள் ஸ்ரீ ஆதி சங்கரர் புஜங்கத்தி குத் தமிழுரையும் விசேஷ உரையும் எழு யிருக்கிறார் என்று அறியும்போது திருச்செ தூர் முருகப் பெருமான் இரட்டிப்பு அதிர்ஷ்ட சாலி என்று சொல்ல வேண்டியிருக்கிறது.



பட்டணத்து மாடு (தோழனிடம்):— பார்த்தியா, அண்ணே! அந்தப் பட்டிக் காட்டு மாடு படுத்துகிற பாட்டை!



# லக்ஸ டாய்லட் சோப்பினால் அழகுபடுத்தும் சுலபமானமுறையை ராஜகுமாரி சொல்கிறார்.





லக்ஸ் டாய்லட் சோப்பின் நுரையை தாராளமாக சருமத்தின் மேல் தடவுகிறேன்...



சுத்தமான, குளிர்ந்த ஜலத்தில் கழுவுகிறேன்..



பின்பு, உலர்ந்த மிருதுவான துண்டினால் முகத்தை துடைக்கிறேன்




சினிமா நட்சத்திரங்கள் விரும்பும் அழகையளிக்கும் சோப்

மேனியை அழகுபடுத்திக் கொள்வதில் தேர்ச்சிபெற்ற எல்லா சினிமா நட்சத்திரங்களும், மென்மலரின் இதழ் போல் மிருதுவானதும் களங்கமின்றி பளபளப்பானதுமான சருமம் ஏற்பட லக்ஸையே நம்பலாம் என்றறிவார்கள். அதன் சுகமளிக்கும் விசேஷம் வாய்ந்த நுரை சருமத்திற்குள் புகுந்து தீங்கை விளைவிக்கும் மாசு மறுக்களை சுலபமாக சுத்தம் செய்து விடுகிறது. ராஜகுமாரியின் அழகு முறையை நீங்களும் 30 நாட்கள் கையாளுங்கள்—பிறகு அதன் சுகமாக சுத்தம் செய்யும் தன்மையை கண்டு மகிழ்வீர்கள்.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladen's Garden, Poonamalle High Road, Kilpauk, Madras.






# P.A. ராஜு செட்டியார் & பிரதர்....

கடைத்தெரு,
கோயமுத்தூர்

murli




## அரைக்கீரை விதைத் தைலம்

அரைக்கீரை விதையுடன் 72-வித சரக்குகளும், அநேக பச்சிலைகளும் சேர்த்துத் தயாரிக்கப்பட்டது. இத் தைலத்தை வாரம் இரு முறை தேய்த்து ஸ்நானம் செய்து வர சிரசைப் பற்றிய சகல வியாதிகளைப் போக்குவதுடன் கண், எரிச்சல், கண் மறைப்பு முதலிய கண் சம்பந்தமான வியாதிகளையும், காது குத்தல், காதில் சீழ் வருதல் முதலிய வியாதிகளையும் கண்டிக்கக் கூடியது.

தயாரிப்பவர்கள்:

## டி. எஸ். ஆர். அண்டு கோ., கும்பகோணம்

•

மதராஸ் விடி ஏஜெண்டுகள்:

**புஷ்பவனம் ஸ்டோர்ஸ், பைக்ராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி**

ஸ்டாக்கிஸ்டு:

**B. பாலபட்டாபி, வைசியாள் தெரு, கோயமுத்தூர்**

Regd. No. M. 4392




# சார்லீஸ் சார்லி பிஸ்கட்ஸ்

அழகிய
டின்களில்




**CHARLEY & CO., USILAMPATTI.**

Agents for Nilgris: Messrs. Brilliant Traders, Walsham, Ootacamund.